

# Agfa Photography at 3m.



The Agfa Isoly-II takes perfect snapshots at close range. Set the aperture to f/8 to get just the right amount of light to the film. Set the shutter speed at 1/30 second, just fast enough to avoid camera shake. Shoot from a distance of 3 m. on slow film — 125 ASA — for greater sharpness. The result? A perfect close-up every time.

The Agfa Isoly-II is a great all-round camera. You simply adjust settings, distance and film to freeze a sports scene forever, capture every detail, near or distant, of a landscape or take a perfect picture in dim, soft light.

The Agfa Isoly-II is built to German specifications and undergoes over 100 exacting tests. See this fine camera soon at your friendly Agfa-Gevaert dealer.

**ISOLY-II**

*for professional results.*









**AGFA-GEVAERT INDIA LIMITED**

Registered Office: Merchant Chamber, 41 New Marine Lines, Bombay 400020 • Branches: Bombay New Delhi • Calcutta • Madras • ® Registered Trademarks of Agfa-Gevaert, Antwerp/Leverkusen.

1st for everything in photographics

SIMOES/AG/5A/80

# வெற்றியின் பின்னணியில் சில வேதனைகள்!

வி.ராமநாராயணன்



கபில்

மெல்போர்னில் இந்தியா அடைந்த அற்புதமான, நம்பவே முடியாத வெற்றியானது நமது அணியின் குறைகளையும் தேர்வுக் குழுவின் தவறுகளையும் தாற்காலிகமாக நாம் மறந்து விட உதவலாம். ஆனால் இவை கிட்டத்தட்ட நம்மைச் சர்வ நாசத்துக்கே இட்டுச் சென்று விட்டன என்பதை மறுக்க முடியாது! உச்ச மட்டக் கிரிக்கெட்டில் யாருமே அறிந்திராத யோக்ராஜ் சிங்கை டீமில் சேர்த்துக்கொண்டதும் மீடியம் வேகப் பந்து வீச்சாளர்களையே பெரிதும் நம்பி அணியை அமைத்ததும் உசிதமல்ல. ஒரு நாள் சர்வதேசப் பந்தயங்களை மனத்தில் கொண்டு ஒருவேளை வேகப் பந்து வீச்சாளருக்கு முக்கியத்துவம் தரப்பட்டிருக்கலாம். ஆனால் ஆஸ்திரேலியர்களின் பலவீனமே ஸ்பின் பௌலர்கள் அவர்களிடம் இல்லாததும் ஸ்பின் பௌலர்களை எதிர்கொள்ள அவர்களால் முடியாததும்தான் என்பதை மறந்து விட்டதாகத் தோன்றுகிறது. இவை மிகப் பெரிய குற்றச்சாட்டுகளாக விசுவரூபம் எடுத்திருக்கும், இந்த சீரிஸில் நாம் தோற்றுப் போயிருந்தோமானால்!

கிரெக் சாப்பெல், டென்னிஸ் லில்லீ ஆகியோரது அற்புதமான ஆட்டத் திறன் காரணமாக இரு அணிகளுக்கும் இடையில் இருந்த வித்தியாசம் பளிச்சென்று தெரிந்தது. இன்றைய கிரிக்கெட் உலகின் மிகச் சிறந்த பாட்ஸ்மன் தாம்தான் என்பதை சாப்பெல் மீண்டும் ஒரு முறை நிரூபித்தார் எனில், பெனுடின் முந்தைய ரிகார்டான 248 டெஸ்ட் விக்கெட்டுகளை முறியடித்துக் காட்டினார் லில்லீ. தமது 48வது டெஸ்டில் 251 விக்கெட்டுக்களை எடுத்து ஆஸ்திரேலியர்களுள் தலைசிறந்தவரானார். இவர் எத்தகைய மாமனிதர் என்பதை முழுமையாக உணர வேண்டுமெனில் 1973ல் இவருக்கு முதுகெலும்பில் அடிபட்டது என்பதையும், அப்போது இனி இவர் கிரிக்கெட்டே ஆடமாட்டார் என்று டாக்டர்களே தீர்ப்பு வழங்கி விட்டனர் என்பதையும் நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும். ஓராண்டுக்கு மேல் கட்டிலும் கட்டுக்களுமாகக் கிடந்தார் லில்லீ.

ஸந்தீப் பட்டேல் சிறந்த ஆட்டக்காரராக உருவாகியுள்ளார். அவரது பாட்டிங் திறமை பற்றி யாருக்கும் ஐயமில்லை. எனினும் அவரது அவசரக் குணம் சந்தேகத்தைக் கிளப்பியிருந்தது. டெஸ்ட் கிரிக்



கவாஸ்கர்



கட்டுரை ஆசிரியர் ஆந்திரா பாங்கில் பணிபுரியும் உயர் அதிகாரி. ஹைதராபாத் சார்பில் ஆடும் சிறந்த ஸ்பின் பௌலர். பல ரஞ்சி டிராஃபி களங்களைக் கண்டவர். சில ஆண்டுகளுக்கு முன் இளைஞர் கிரிக்கெட் அணியில் அங்கம் வகித்து ஆஸ்திரேலியா நியூஸிலாந்தில் சுற்றுப்பயணம் செய்து திரும்பியவர். மெல்போர்ன் வெற்றியை வரவேற்றாலும் இங்கு கசப்பான சில உண்மைகளையும் தயக்கமின்றி வெளியிடுகிறார்.

# முரட்டுக் காளை பரிசுப்போட்டி

இப்படத்தின் மகத்தான வெற்றிக்கு காரணங்கள்,
12 தொகுப்புகளில் ஒவ்வொன்றிலும் மூன்றாகத் தரப்பட்டுள்ளன

ஒவ்வொரு தொகுப்பிலும் ஒவ்வொரு காட்சிக்கும் பக்க வாட்டில் முறையே அ, ஆ, இ என்ற எழுத்துக்கள் தரப்பட்டிருக்கின்றன.

நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் 12 தொகுப்புகளையும் படித்து பின் ஒவ்வொரு தொகுப்பில் உள்ள மூன்று காட்சிகளிலும் நீங்கள் எது மிகவும் நன்றாக இருக்கிறது என்பதை மனதில் இருத்தி இந்த 12 தொகுப்புகளிலும் உள்ள அ, ஆ, இ என்ற எழுத்துக்களில் ஒன்றுக்கு நேராக "✓" இந்த அடையாளத்தை இட்டு பாரத்தை பூர்த்திசெய்து எங்களுக்கு அனுப்பவேண்டியது.

**"முரட்டுக்காளை" பரிசுப் போட்டி**

ஏவிஎம் புரொடக்ஷன்ஸ் பிரைவேட் லிமிடெட், 38, ஆற்காட் ரோடு, சென்னை-600 026.

மேற்கண்ட விலாசத்திற்கு உங்கள் பதில்களை **31-3-1981**க்குள் அனுப்பிவைக்கும்படி கேட்டுக்கொள்கிறோம்.

இப்போட்டியில் பங்கு பெறும் நபர் ஒவ்வொருவரும் ஒவ்வொருவிடையுடனும் முரட்டுக்காளை பார்த்த டிக்கட்டின் பகுதியை (COUNTERFOIL) அனுப்பிவைக்க வேண்டும். டிக்கட் இல்லாத விடைகள் ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது.

ஒரு நபர் எத்தனை விடைகள் வேண்டுமானாலும் எழுதலாம். ஆனால் ஒவ்வொன்றும் தனித் தனி பாரத்தில் இருக்கவேண்டும். அத்துடன் டிக்கட்டின் பகுதியும் இருக்கவேண்டும்.

இதற்கான பாரங்கள் "முரட்டுக்காளை" திரையிடும் தியேட்டர்களில் கிடைக்கும். பாரங்கள் கிடைக்காவிட்டால் தனிக் காகிதங்களிலும் எழுதி அனுப்பலாம். அப்படி எழுதுபவர்கள் தொகுப்பு நம்பர்களை வரிசைப்படி எழுதி அதற்கு நேராக அ, ஆ, இ இவற்றில் ஒன்றை எழுதி உங்களுக்கு பிடித்தமானதை '✓' மார்க் செய்ய வேண்டும்.

இதில் பங்குபெற கட்டணம் எதுவும் கிடையாது.

இது சம்பந்தமாக எந்தவித கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்ளப்பட மாட்டாது. இப் போட்டியில் நடுவர்கள் தீர்ப்பே முடிவானது.

போட்டியின் முடிவு, பரிசு பெற்றவர்கள் விபரங்கள் ஆகியவை பின்னர் அறிவிக்கப்படும்.

ஒன்றுக்கு மேற்பட்ட சரியான விடைகள் வந்தால் பரிசுத்தொகை ரூ.50,000/-ம் சமமாக பகிர்ந்து அளிக்கப்படும்.

விடைகள் சுத்தமாக எழுதி அனுப்பப்பட்டும், '✓' மார்க் செய்யப் பட்டும் இருக்க வேண்டும். அப்படி இல்லாத விடைகள் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்பட மாட்டாது.



**தேவி பாரடைஸ்**
**மகாராணி**
**ராக்ஸி**
**AVM ராஜேஸ்வரி**
மற்றும்
தென்னாடெங்கும்

**எல்லா வயதினரும், எல்லா வகுப்பினரும் குடும்பத்துடன் பார்க்கக்கூடிய, விரசமில்லாத. பொழுதுபோக்குப் படம்.**

# ரூ 50,000.

**1**
முதல் மந்திரிரேட்டு — அ ☐
உ-ம் மந்திரிரேட்டு — ஆ ☐
வீரய்யா, சங்கிலி சண்டை — இ ☐

**2**
பொதுவாக என் மனசு தங்கம் — அ ☐
புதுவண்ணங்கள் — ஆ ☐
எந்தப் பூவிலும் வாசம் உண்டு — இ ☐

**3**
மாமன் மச்சான் — அ ☐
கோபாலுகோடி கண்ட — ஆ ☐
பொதுவாக என் மனசு தங்கம் — இ ☐

**4**
காளையன் கம்புச் சண்டை — அ ☐
காளையன், சங்கிலி சண்டை — ஆ ☐
காளையன், சுந்தரவேலு கத்திச் சண்டை — இ ☐

**5**
ரேக்ளா ரேஸ் — அ ☐
ரயில் சண்டை — ஆ ☐
காளையன், சுந்தரவேலு பறந்து தாக்கும் சண்டை — இ ☐

**6**
சௌந்தர்யம் காளையனிடம் பாடலுக்கு அர்த்தம் கேட்பது — அ ☐
காளையன் தம்பிகளிடம் பாடலுக்கு அர்த்தம் கேட்பது — ஆ ☐
காளையன் தெய்வானை அப்பத்தாவிடம் பாடலுக்கு அர்த்தம் கேட்பது — இ ☐

**7**
சாமிப் பிள்ளை காளையனிடம் நிலம் கேட்பது — அ ☐
சாமிப் பிள்ளை சுந்தரவேலுவிடம் காளையன் நிலம் தராதது பற்றி பற்றவைத்தல் — ஆ ☐
சாமிப் பிள்ளை காளையனிடம் கல்யாணம் பற்றி கேட்டல் — இ ☐

**8**
சாமிப் பிள்ளை சுந்தர வேலுவிடம் ஊரிலுள்ள கிளிச்சவாயர்களைப் பற்றிக் கூறுதல் — அ ☐
சாமிப் பிள்ளை மரத் தோப்பில் பள்ளியை யாரிடம் காளையனுக்குப் பாடம் கற்பிக்க வழி சொல்லுதல் — ஆ ☐
சாமிப்பிள்ளை சுந்தர வேலுவிடம் முத்தழகுவை அனுப்பி கன்னம்மாவைக் கொண்டு வரும்படி கூறல் — இ ☐

**9**
சுந்தரவேலு கன்னம்மாவை விரும்புவதாகக் கூறுதல் — அ ☐
சுந்தரவேலு கன்னம்மாவைக் கற்பழிக்க முயற்சி — ஆ ☐
சுந்தரவேலு சொந்த தரிசு நிலத்தில் தன் வழியில் குறுக்கிட வேண்டாம் என்று கூறுதல் — இ ☐

**10**
காளையன் வீட்டில் சின்னத்தம்பிக்கு கல்யாண அவசியத்தைக் கூறுகிறான் சின்னையா — அ ☐
காளையன் வீடு வாசலில் வெள்ளைத் துணிகள் காய்தல் — ஆ ☐
காளையனுக்கும் தம்பி களுக்கும் சாப்பாடு பரிமாறுகிறாள் கன்னம்மா — இ ☐

**11**
காளையன் கன்னம்மா விடம் கல்யாணப் பேச்சு — அ ☐
கன்னம்மா வீட்டை விட்டுப் போவதாக நடிப்பு — ஆ ☐
காளையனைக் கல்யாணத் திற்கு சம்மதிக்க வைத்தல் — இ ☐

**12**
காளையன் கன்னம்மா இருவரும் திட்டம் நிறைவேறியது பற்றி மகிழ்ச்சி — அ ☐
தம்பிகள் கன்னம்மாவை வீட்டைவிட்டுப் போகும்படி நாடகம் ஆடுதல் — ஆ ☐
இரவில் காளையன் கன்னம்மாவைத் தனியாகச் சந்திக்க முயற்சி, தம்பிகள் விழிப்பு — இ ☐

ஏவி எம் மின்

# முரட்டுக் காளை

S.P. முத்துராமன்
பஞ்சு அருணாசலம்
இளையராஜா

எம். குமரன் எம். சரவணன்
எம். பாலசுப்ரமணியன்

AVM PRODUCTIONS



அட்டைப்படத்தில்
காட்சி தருபவர்:
**அனிதா ராஜ்**

வண்ணப்படம்
எடுத்தவர்:
**ஜக்மோஹன்**

கெட்டுக்குத் தேவைப்படும் அமைதி அவரிடம் இல்லை என்று கருதப்பட்டது. ஆனால் அவர் திறன் ஆஸ்திரேலியாவில் ஆட்டத்துக்கு ஆட்டம் மெருகேற லில்லி, பாஸ்கோ, ஹாக்ஸ் ஆகியோரது வேகப் பந்து வீச்சை அபாரமாகச் சந்தித்ததுடன் அதிசயிக்கத் தக்க ஆக்கிரமிப்பு வேகத்தையும் வெளிப்படுத்தினார். ஆஸ்திரேலியாவின் முன்னாள் கிரிக்கெட் வீரரும் இன்றைய மதிப்பு மிக்க எழுத்தாளருமான பில் ஓ ரெய்லி, இன்றைய சர்வதேச கிரிக்கெட் ஆட்டக்காரர்களில் தலைசிறந்த ஒருவர் எனச் சந்திப் பட்டேலை வர்ணித்தார். வசிஷ்டர் வாயால் பிரும்ம ரிஷியானார் ஸந்திப்.

பத்து ஆண்டுகளுக்கு மேலாக வேகப் பந்து வீச்சைச் சந்தித்துச் சந்தித்து இந்தியாவின் வாமன வீரர்கள் கவாஸ்கரும், விசுவநாத்தும் களைத்து விட்டார்கள் என்றே தோன்றுகிறது. ஆயினும் கடைசி டெஸ்டில் இருவருமே போதிய அளவு துணிவும் உறுதியும் காட்டினர். பிட்சில் மிக நீளமான மோசமான பகுதி உருவாகியிருந்தும் அத்தியாவசியமான ரன்களை எடுத்தனர். இதற்கு முந்தைய இரு டெஸ்ட்களிலும் இவர்கள் இருவரும் தொடர்ந்து தோல்விக்கு மேல் தோல்வியைச் சந்தித்ததும் திலிப் வெங்சர்க்காரும் நமது அணியைக் கைவிட்டதும் ஆஸ்திரேலியா அந்த டெஸ்ட்களில் தனது அபரிமிதமான சிறப்பை நிலைநாட்டிக்கொள்ள இடம் தந்து விட்டன.

சேதன் சௌஹானைக் குறை கூறியவர்கள் இன்று மௌனமாகி விட்டார்கள். சௌஹான் எத்தனையோ தடவைகளில் அமைதியான ஆட்டத்தை வழங்கி இந்தியாவுக்குச் சிறப்புப் பணி ஆற்றியுள்ளார். அவுட் ஆகாமல் நீண்ட நேரம் விக்கெட்டைப் பாதுகாப்பது என்பதே ஓர் அரிய கலை. அதில் கவர்ச்சி இராது. ஆனால் இதற்குத் தேவையுண்டு. அதைப் பூர்த்தி செய்பவர் சௌஹான். இந்தச் சுற்றுப் பயணத்தின் போது நம்பகமான பாட்ஸ்மனாக இருந்ததுடன் சில கஷ்டமான காட்சுகளையும் பிடித்துப் பிரமிக்க வைத்தார்.

ஸ்பின் போலிங்குக்கு மூன்றாவது ஆசாமி இல்லாத குறையும் வேகப் பந்து வீச்சாளரில் பின்னியும் யோக்ராஜ் சிங்கும் டெஸ்ட் தரத்துக்கு உயராதவர்கள் என்பதும் இந்த டூரின்போது பெரிதும் உணரப்பட்டன. டோஷி சிறந்த போலர்தான். ஆனால் பேடிக்கு நிகரான தாக்குதலை அவரிடம் எதிர்பார்க்க முடியாது. ஹியூஸ், சாப்பெல், வால்டர்ஸ் ஆகியோர் துரிதமான பாதத் திறன் காட்டி டோஷியின் பந்துகளை நாலா திசைகளிலும் அடித்தபோது அவர் நிலைகுலைந்துதான் போனார். ஆயினும் முதல் டெஸ்டில் தமது பந்துகள் அடித்து நொறுக்கப்படுவதைப் பார்த்த பின் அவர் சமாளித்துக் கொண்டு இரண்டாவது டெஸ்டில் இன்னும் அனுசரணையான சூழலில் குறி தப்பாது பௌல் செய்தார் என்பதையும் கூறவேண்டும். ஆஃப் ஸ்பின்னர் ஷிவ்லால் யாதவ் எதிர்பார்த்ததை விடச் சிறப்பாக இயங்கினார். அனுபவம் அவர் திறமைகளை வளர்த்து வருகிறது. அவரது பௌலிங் திறன் பற்றியும் எப்படி அவர் டெஸ்ட் கிரிக்கெட்டில் அள்ளிக் கொள்ளப்பட்டார் என்பது குறித்தும் சர்ச்சைகள் நடந்தாலும் அவருடைய விட்டுக் கொடுக்காமல் போராடும் குணம் பற்றியும் நெருக்கடியான கட்டத்திலும் அச்சமற்று பாட்டிங் செய்யும் ஆற்றல் குறித்தும் அசாதாரணமான ஃபீல்டிங் திறன் பற்றியும் யாருக்கும் சந்தேகம் இராது.

மூன்றாவதாக ஒரு ஸ்பின் பௌலர் சேர்த்துக்கொள்ளப் பட்டிருந்தால் டீமுக்கு மிகவும் உதவியாக இருந்திருக்கும் என்பதில் எனக்குத் துளியும் சந்தேகம் கிடையாது. அடிலெய்டில் மாட்சைத் தோல்வியின்றிக் காக்கப் போராடுவதற்குப் பதில் வெற்றி காணவே முயன்றிருக்கலாம். வேகப் பந்து வீச்சாளரை நாம் உற்சாகப் படுத்த வேண்டியதுதான். அதற்கேற்ப பிட்சுகளையும் உருவாக்க வேண்டும்தான். ஆனால் இன்னும் பல ஆண்டுகளுக்கு நமது பிரதான ஆயுதம் ஸ்பின் பௌலிங்காகத்தான் இருக்க முடியும். இதே நேரத்தில் கபில் வேகப் பந்து வீச்சுக்குத் தொடர்ந்து தலைமை தாங்கி வருவார். ஆயின் அவரை மட்டுமே நம்பி வருத்திக் கசக்கிப் பிழிவது பொன் முட்டை இட்ட வாத்து கதையாகி விடலாம்.

இந்திய அணி ஆஸ்திரேலியாவில் இருக்க அதே நேரத்தில் மதன்லால் கல்கத்தாவில் இருந்ததைப் பார்க்க முன்னாள் இங்கிலாந்து காப்டன் மைக் பிரியர்லியும் மேற்கிந்திய வீரர் கிப்ஸூம் அதிசயித்தார்கள்! இவர்கள் வங்க கிரிக்கெட் சங்கத்தின் பொன் விழாவில் பங்கேற்க வந்திருந்தார்கள். மதன்லாலைத்தான் ஒதுக்கியது என்றால் தேர்வுக் குழு, அமர்நாத்தையும் என்றுமே துச்சமாக மதித்து

வந்துள்ளது. டெஸ்ட் கிரிக்கெட்டில் பரிதாபத் தோற்றத்தை அமர்நாத் என்றுமே அளித்ததில்லை. அவரை ஏன்தான் ஓரத்துக்குத் தள்ள வேண்டுமோ? ஆஸ்திரேலிய சுற்றுப் பயணத்துக்குத் தேர்வுக் களமாக விளங்கியது இரானி கோப்பை ஆட்டம் தான். அதில் அமர்நாத் அபாரமாக ஆடியிருந்தார். — 235 நாட் அவுட்! தேர்வுக் குழுவினர் இன்னும் என்னதான் எதிர்பார்க்கிறார்களோ? கெய்க்வாடும் நல்ல ஆட்டத் திறனுடன் விளங்கி வந்தார். அவரது அனுபவம் ஆஸ்திரேலியச் சுற்றுப் பயணத்தில் மிக உபயோகமாக இருந்திருக்கும். ஆனால் நாம் கண்டது என்ன? இவர்கள் எல்லாம் நிராகரிக்கப்பட, ஆரம்ப பாட்ஸ்மன்களும் சரி, மத்திய அணியினரும் சரி சடசடவென்று சரிவதைத்தான் பார்த்தோம்.

தேர்வுக் குழுவினர் மூன்று டெஸ்ட் புது முகங்களை ஏற்றனர். ஸ்ரீனிவாசன், கீர்த்தி ஆஸாத், யோக்ராஜ் சிங் ஆகியோர். இவர்களுக்கு 14, 15, 16வது இடங்கள். ஆனால் முதல் 13லேயே பாதிப் பேருக்கு மேல் அயல் தேச சுற்றுப் பயண அனுபவம் இல்லாதவர்கள். ஸ்ரீனிவாசன் நீண்ட காலமாய்க் காத்திருப்பவர். அவரைச் சேர்க்க வேண்டியதுதான். ஆனால் ஆஸாத்துக்கும் யோக்ராஜுக்கும் அவசரம் ஏதுமில்லையே. யோக்ராஜின் தேர்வு வியப்பிலும் வியப்பு! டி. ஈ. ஸ்ரீனிவாஸனுக்குத் தம் ஆற்றலைக் காட்ட அதிக சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. ஒருவேளை நியூஸிலாந்தில் ஆடலாம்.

நியூஸிலாந்தில் சுலபமான வெற்றி கிட்டாது. அங்கு மாபெரும் வேகப் பந்து வீச்சாளர் ரிச்சர்ட் ஹாட்லி இருக்கிறார். சூழ்நிலையும் வேகப் பந்து வீச்சுக்கே சாதகம். அம்பயரிங், ஆஸ்திரேலியா, இந்தியா போலத்தான் நியூஸிலாந்திலும். சர்ச்சைக்குரிய தரத்தில்தான் இருக்கும். மொத்தத்தில் நம்மவர் படாத பாடு படவேண்டியிருக்கும். ஸானிலும் விசவும் ஆஸ்திரேலியாவை ஒரு துர்ச் சொப்பனமாக மறந்து நியூஸிலாந்தில் தங்கள் முழுத் திறமையையும் காண்பிப்பார்கள் என்று நம்புவோம். சௌஹான் தமது முதல் டெஸ்ட் செஞ்சுரியை எடுப்பார் என்று எதிர்பார்ப்போம்.

மெல்போர்ன் வெற்றி தேர்வாளர்களுக்கும் சரி, ஆட்டக்காரர்களுக்கும் சரி, மெத்தனத்தை உருவாக்கி விடக் கூடாது. தேர்வாளர்கள் கொஞ்சம் ஆத்ம பரிசோதனை செய்துகொள்ளட்டும். ஒவ்வொரு முறையும் அவர்கள் சிறந்த டீமைத் தேர்ந்தெடுக்க வேண்டும். ஒரு குறிப்பிட்ட மாட்ச் அல்லது தொடரை அவர்கள் நினைவில் கொள்ள வேண்டுமேயன்றி என்றோ வரப் போகிற எதிர்காலத்தை அல்ல. இளைஞர்களை உற்சாகப்படுத்துவதாகக் கூறிக் கொண்டு, திறமை மிக்க, திரும்பத் திரும்ப ஆற்றலை நிரூபித்துள்ள வீரர்களைக் கிடப்பிலே போடுவது சரியல்ல.

ஆங்கிலத்திலிருந்து தமிழாக்கம்:
-குட்டி கிருஷ்ணன்

---

## ஆழ் கிணற்றுக்கு மூங்கில் குழாய்!

உ. பி. மாநிலம் கோண்டா மாவட்டத்தில் கிராம முன்னேற்றப் பணிகளில் இளைஞர் ஒருவர் புதியமுறையைக் கடைப்பிடித்து வருகின்றது. கட்சி சார்பற்ற முறையில் இது நடைபெறுகின்றது.

ஆழ் கிணறு தோண்ட ஸ்டீல் குழாய்களுக்கு 100 அடிக்கு ரூ. 1500 செலவாகிறது. அதற்குப் பதிலாக கிராம மக்கள் கூறிய ஏற்பாட்டின்படி மூங்கில் குழாய்கள் போட 100 அடிக்கு ரூ. 500 தான் ஆகிறது.

நான்கு அங்குல விட்டமுள்ள மூங்கில் குழாய்களை எடுத்து உள்ளே உள்ள மிருதுவான பகுதிகளை அகற்றிஎன்றுடன் மற்றொன்றை இணைத்து, தேங்காய் நார் கயிறுகளைக் கொண்டு கட்டிவிட வேண்டும். மரம் இணைக்கும் கவிகூல் பேஸ்ட் பூசவேண்டும். 20 ஆண்டுகள் வரை பழுது படாமல் இருக்கும்.

ஆதாரம் : ஆர்கனைசர்
தகவல் : கோ. கலிவரதன்

## ஆண்டுத் தொடக்கம் எது?

மேலை நாடுகளுக்கு முற்காலத்தில் மார்ச் (MARCH) மாதம்தான் ஆண்டுத் தொடக்கமாக இருந்தது. ஆகஸ்ட் (AUGUST) என்பது ஆறும் மாதம். SIXTILIS (ஸஷ்டி-ஆறாவது) என்ற பெயரால் வழங்கப் பட்டது.

செப்டம்பர் (SEPTEMBER) செப்டினியல் (SEPTENIAL சப்த-ஏழாவது மாதம்) என்று குறிப்பிடப்பட்டது.

மற்றும் அக்டோபர் (OCTOBER) (அஷ்ட-எட்டாவது) எட்டாம் மாதம் என்று குறிப்பிடப் பட்டது.

நவம்பர் (NOVEMBER) (நவம்-ஒன்பது) ஒன்பதாவது மாதம் என்று வழங்கப்பட்டது.

டிசம்பர் (DECEMBER தசம்-பத்து) பத்தாவது மாதம் என்று வழங்கப்பட்டு வந்தது.

இந்த விவரங்களை 'பெரிப்புளுஸ்' என்ற வரலாற்று ஆசிரியர் தம் பயணக் குறிப்புக்களில் குறித்துள்ளார்.

பி. நாராயணன்



# வட்ட மேஜை

● மேல் அட்டையைப் பார்த்ததும் அட்டையிலும் ஊனமுற்றவர்களையே போடக்கூடாதா என்று நினைத்தேன். உள்ளே அந்த அழகிகளைப் பற்றிப் படித்ததும் மனம் மிகவும் வேதனைப்பட்டது. இவ்வளவு அழகாகப் படைத்துவிட்டு இவர்களை ஊனமுற்றோர்களாகப் படைத்த கடவுள் கல் மனம் படைத்தவர்தான்.
சென்னை-1 கலாமூர்த்தி

● என்னைப் போன்ற உடல் ஊனமுற்றோர் இதயத்தில் நீங்காத இடம் பெறும் வண்ணம் சிறப்பிதழ் அமைந்துள்ளது. தங்களது சேவைக்கு நன்றி.
சென்னை-4 எம். பி. நந்தகுமார்

● இந்தச் சிறப்பிதழ் வெளிவருவதற்கு மூல காரணமாயிருந்த சிக்கி ராமசந்திரனுக்கு வாசகர்கள் சார்பில் இதய நெகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொள்கிறேன். சிக்கியிடம் சிக்காத விஷயங்களே இருக்காதோ?
வீரபாண்டி வதிலை அன்புச் செல்வன்

● 'ஊனமும் உள்ளமும்' தங்கள் சிறப்பிதழின் 'மாஸ்டர்பீஸ்' ஆக அமைந்து விட்டது. உடல் ஊனமில்லாத எனக்கே கதையைப் படித்த பின் தாழ்வு மனப்பான்மையையும் சந்தேகங்களையும் விட்டொழித்து உற்சாகமாக இருக்கத் தோன்றுகிறது.
கோவை ஆர். குமார்

● 'ஒப்பிலி' சிறுகதை படித்தேன். திறமையாக சப்ளை செய்யும் சர்வர் 'ஒப்பிலி'க்குக் கண் தெரியாது என்றதும், திகைப்பாக இருந்தது. அவனைக் கிண்டல் செய்யும் 'விடலை'களை சரக்கு மாஸ்டர்களின் ஜல்லிக் கரண்டியைப் பிடுங்கி நாலு மொத்து மொத்த வேண்டும் போல இருந்தது.
சென்னை-11 மணி மகன்

● நளினி சாஸ்திரியாரே! இளைய ராஜாவின் இசையைப் பற்றி ஒரு வரிகூட "மீண்டும் கோகிலா"வில் காணாதது ஏனோ? இன்னிசை இளவலுக்கு வெற்றியைப் பகிர்ந்து கொள்வதில் முக்கிய பங்குண்டு என்பதை எப்படி மறந்தீரோ?
விருத்தாசலம் எம். கிரிதரன்

● தலையங்கத்தில் கூறப்பட்ட "லாப நோக்கு என்பது அருவருப்பான விஷயமல்ல, அவசியமான அம்சம்" என்ற எண்ணம் எப்படி சார் பொதுமக்களிடம் உருவாகும்? அந்த எண்ணத்தை உருவாக்கவா இன்றைய அரசியல் தலைவர்கள் பாடுபடுகிறார்கள்? காது ஊனமுற்றவர்கள்கூட பார்வையால் சங்கு ஊதுவதை உணர்ந்து கொள்வார்கள். இவர்கள்தான் கண்ணும் தெரியாதவர்களாயிற்றே!
மேட்டுப்பாளையம் எம். ரத்தினகுமார்

● ரோஜாவின் ராஜா மறைந்த அன்று வற்றிப்போன எங்கள் கண்ணீரை இன்று மீண்டும் ஊற்றெடுத்து, கண்களில் உருண்டோடச் செய்துவிட்டார் கண்ணதாசன்!
சென்னை-61 வி.ஜி. நேசன்

● கண்ணதாசன்தான் அளவுக்கு மீறி நேருவைப் புகழ்கிறார் என்றால் நேரு கென்னடி சந்திப்பைக் காட்டும் படம் வெளியிட்டு, 'கடல் சூழ்ந்த உலகைப் படை சூழாமல் காத்த நேரு' என்ற விளக்கத்துடன் பிரசுரித்திருக்கிறீர்களே? உங்களுக்கு ஒருவேளை பித்தம் தலைக்கேறிவிட்டதோ? நம் நாட்டையே சீனாவிடமிருந்து 1962லும் பாகிஸ்தானிடமிருந்து 1948லும் காப்பாற்ற முடியாமல் அவர்கள் படைகள் நம்மைச் சூழ்ந்து, 50,000 ச. மைல்களுக்கு மேலான பிரதேசத்தைக் கோட்டை விட்டோமே! எதற்கு இந்த மானுட வழிபாடு?
சென்னை-17 சித. வைரவன்

● கண்ணதாசன் நமது நாட்டின் மீது சீனப் படையெடுப்பு நடந்தபோது ரஷ்யா கம்யூனிஸ்ட் அகிலம் என்பதை உடைத்துக் கொண்டு நம்மை ஆர்வத்தோடு ஆதரிக்க முன்வந்தது என்று எழுதியிருப்பது சரியாகப் படவில்லை. உண்மையில் அன்று ரஷ்யா தட்டிக் கழித்து மௌனம் சாதித்தது.
நமக்கும் அமெரிக்காவுக்கும் அபிப்பிராய வேற்றுமை இருந்தும் ஒரு நாட்டின் சுதந்திரம் பறிபோகக் கூடாது என்ற எண்ணத்தோடு அமெரிக்காதான் நவீன மலைப் பிரதேச ராணுவ உபகரணங்களை ஏராளமாக விமானங்கள் மூலம் அனுப்பியது.
கடலூர் ஏ. பிச்சையா பிள்ளை

● கால் ஊனமுற்றவர்கள் ரயில் பயணம் செய்யும்போது அவர்களுடைய சக்கர நாற்காலிக்குக் கட்டாயமாக லக்கேஜ் கட்டணம் வசூலிக்கப்படுகிறது. அட்லீஸ்ட் இந்த ஆண்டிலிருந்தாவது இந்த விஷயத்தில் சலுகை காட்டலாமே.
பெங்களூர்-5 டி. ஏ. லலிதா

● திரு ஜயராமன் எம். ஏ. இரண்டு விதஊனம் உடையவர். தமது ஏழாம் வயதில் டைபாய்ட் ஜுரத்தில் தமது கண்களை இழந்தார். 14வது வயதில் தமது காலையும் "காங்கரீன்" என்ற வியாதியால் இழந்தார். பிறகே மேலே படிக்கத் தொடங்கினார். இன்று தாம்பரம் கிறிஸ்துவக் கல்லூரியில் ஆங்கில பேராசிரியராகப் பணியாற்றுகிறார். இவருக்குக் கல்யாணமாகி மூன்று குழந்தைகள் இருக்கிறார்கள். அவரது வாழ்விலே எத்தனையோ எதிர்ப்புக்கள், சஸ்பென்ஸ்கள் வெற்றிகள். ஹெலன் கெல்லர் மாதிரி இருக்கும் இவரது சுய சரிதம்.
தன்னை நாடி வரும் எவருக்கும் இலவசமாகப் படிப்புச் சொல்லிக் கொடுக்கிறார். புல்லாங்குழல் கற்றுக் கொடுக்கிறார். நிறைகுடம், திரு ஜெயராமன்.
சென்னை-16 சாவித்திரி வேங்கடாசலம்



செல்வி சீதா - செல்வன் ரவி

கல்கி நேயர்கள் அனைவரும் தங்கள் குடும்ப நிகழ்ச்சியாகவே கருதிமகிழ எண்ணுகிற ஒரு வைபவத்தைப் பற்றித் தெரிவித்துக் கொள்வதில் ஆனந்தமடைகிறோம்.

மணமகள் சீதா தந்தை வழியில் அமரர் கல்கி திரு ரா. கிருஷ்ணமூர்த்தியின் பேத்தி. தாய் வழியில் ஸ்ரீமதி எம். எஸ்.—ஸ்ரீ சதாசிவத்தின் பேத்தி. கல்கி ஆசிரியர் திரு கி. ராஜேந்திரனின் மூத்த குமாரி.

மணமகன் ரவி மணக்கால் ஸ்ரீ கணேசய்யரின் பேரன். ஸ்ரீ எம். ஜி. பாலசுப்பிரமணியன் ஐ.ஏ.எஸ். (ரிடையர்ட்) அவர்களின் மூத்த குமாரன்.

காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகளின் பரிபூரண ஆசிகளுடன் திருமணம் சென்னை ஏ. வி. எம். ராஜேஸ்வரி திருமண மண்டபத்தில் 6-2-81 வெள்ளியன்று வெகு விமரிசையாக நடந்தது.

காலை முகூர்த்தத்தின் போதும் மாலை வரவேற்பு விருந்து உபசாரத்தின் போதும் அன்பு வெள்ளம் அலைபாய்ந்தது.

அமைச்சர்களும், அரசு அதிகாரிகளும், பத்திரிகை ஆசிரியர்களும், எழுத்தாளர்களும், ஓவியர்களும், இசை உலகப் பிரபலஸ்தர்களும் தொழில், வர்த்தகப் பிரமுகர்களும், விளம்பரத் துறைக் கலைஞர்களும் கல்கி ஏஜெண்ட்களும் மற்றும் ஏராளமான நண்பர்களும் வந்திருந்து மணமக்களை வாழ்த்தினர்.

கல்கி குடும்பத்துப் பெரியவர் செம்மங்குடி ஸ்ரீ ஸ்ரீனிவாச அய்யர் இன்னிசையால் ஆசி நல்கினர். லால்குடி ஸ்ரீ ஜெயராமன், உமையாள்புரம் ஸ்ரீ சிவராமன் ஆகியோரின் பக்க வாத்தியங்களுடன் கூடிய அவரது அன்றைய கச்சேரியைக் கேட்டவர்கள் தேவ கானம் மாந்திய திருப்தி அடைந்தனர்.

அடையாறு கர்நாடக இசைக் கல்லூரிப் பேராசிரியர் ஸ்ரீ லட்சப்பா தமது குழுவினருடன் திருமணத்தின்போது இரு தினங்களும் நாதசுவர மங்கல இசை பொழிந்தார்.

பொங்கும் மங்களம் எங்கும் தங்குக!

புகைப்படம்: உத்ரா







காஷ்மீரத்தின் பிரதமராவதற்குத் தன் மகனுக்கு எல்லாத் தகுதியும் இருப்பதாக ஷேக்-அப்துல்லா கருதுகிறார்!






# இறைவா! இதென்ன சோதனை!

இறைவா இதென்ன சோதனை! உன்னைக் கருணைக் கடல் என்பதும் பொய்யா? ஏன் இப்படி எங்களை வதைக்கிறாய்?

பெங்களூரில் கோர கிருத்தியங்களைப் பார்த்தோம். சர்க்கஸ் கூடாரம் பற்றி எரிய, அவரவரும் உயிர் தப்பினால் போதும் என்று ஓட, அந்த அமளியில் மதலைகள் மிதிபட... அவர்களைக் காக்க எண்ணிய தாய்மார்களும் தீயில் வெந்து மடிய... ஐயோ! நினைக்கவும் நெஞ்சம் கூசுகிறது!... ஆண்டவனே இது என்ன அநியாயம்!

அந்த அதிர்ச்சியிலிருந்து மீண்டுவருவதற்குள் இன்னொரு பேரிடி! காது பிளக்கும் ஓசைகள்!

ஒன்றல்ல, இரண்டல்ல, மூன்று ரயில்கள் ஒரே விபத்தில் சிக்குகின்றன. ஒன்றன் மீது ஒன்று மோதிச் சிதறுகின்றன! வாணியம்பாடியருகே சொல்லொணாத் துயரக் காட்சிகள்! நெஞ்சை உருக்கும் சோகக் குரலொலிகள்! அனுதாபம் தெரிவிக்கவும் நா அசையாமல் தொண்டை அடைக்கத் தவிக்கிறோம்.

பகவானே! உன்னை ஆபத்பாந்தவன், அனாத ரட்சகன் என்றுதான் எண்ணியிருந்தோம். கல்மனம் படைத்தவன் என்பதையும் இன்று உணர்கிறோம். ஊழிக் கூத்து ஆடத் தொடங்கி விட்டாயா?

இல்லையேல், ஸ்பென்ஸர் கட்டிடத்தில் ஏன் இந்தப் பெரும் தீ ? நகருக்கே அழகு செய்த அந்தப் புராதனக் கட்டிடம் இன்று ஏன் கருகி வெறும் எலும்புக் கூடாகி நிற்கிறது?

கடவுளே! உன்னைக் குறை சொல்லிப் பயனில்லை. தாபத்திலும் கோபத்திலும் உன்னை ஏசிவிடுவது எமக்குச் சுலபம். ஆனால் சற்று அமைதியாகச் சிந்தித்தால் தவறு எங்கள் பேரில்தான் என்று உணர்வோம்.

தேசம் முழுவதுமே இன்று பொறுப்பின்மை தலைவிரித்தாடுகிறது. பெருந்தலைவர்கள் தொடங்கி நடுத்தெரு நாராயணன் வரை யாருக்கும் எதிலும் பிடிப்பில்லை. சகலத்திலும் மெத்தனம், நமக்கென்ன வந்தது என்ற போக்கு... ''வந்தான், பார்த்தான், வெற்றி கொண்டான்'' என்பார்கள் ஸீஸர் பற்றி. இங்கோ வருகிறார்கள், நாற்காலி தேய்க்கிறார்கள், வீடு திரும்புகிறார்கள்! செய்வன திருந்தச் செய் — பள்ளி வகுப்புக்குள்ளேயே செல்லுபடியாகாத சொற்றொடர்.

ஏன் நாங்கள் இப்படி ஆகிவிட்டோம்? இவ்வாறு இருப்பதால் ஏற்படும் விபரீதங்களைக் கண்முன் கண்டும் ஏன் இப்படியே இருக்கிறோம்?

சர்க்கஸ் கூடாரம் அமைய விதிமுறைகள் உண்டு. அவற்றை அலட்சியப்படுத்தினோம். ஒருபக்கம் கழிவு நீர் ஓடும் பெரும் பள்ளம். யாருமே ஆபத்து என்றால் அந்தப்பக்கம் தப்பி ஓட முடியாது என்று தெரிந்திருந்தும் ஏன் அங்கு கூடாரம் அமைய அனுமதி தந்தோம்? தீயணைப்புப் படையை அழைக்க முடியாமல் ஏன் ஃபோன் இணைப்பு பாழாகியிருந்தது? பொறுப்பின்மை, அலட்சியப்போக்கு, ஏனோதானோ மனப்பான்மை — வேறென்ன?

வாணியம்பாடியருகே விபரீதம் நிகழ்வதற்கு முன்னால் ஒன்றா, இரண்டா, வரிசையாக எத்தனை எத்தனை தவறுகள்! தவிர்க்கப்பட்டிருக்கக் கூடிய விபத்து, மனிதர்கள் கடமை உணர்வுடன் செயல்படாததால் விசுவரூபமெடுத்தது! அசிரத்தை உயிர்களைக் குடித்தது!

இறைவா! பெங்களூரிலும் வாணியம்பாடியிலும் மட்டுமல்ல, தேசம் முழுவதுமே பரவியுள்ள நோய் இந்தப் பொறுப்பின்மை. ஆண்டவனே! இந்த நோய் நீங்கி நாங்கள் குணமடைய உதவு. ஆன்ம பரிசோதனை செய்துகொண்டு ஆரோக்கியம் பெற வழிகாட்டு. பகவானே! எங்களுக்குக் கட்டுப்பாட்டையும் கடமை உணர்வையும் செயல்திறனையும் செய்நேர்த்தியையும் மனிதாபிமானத்தையும் உழைப்பார்வத்தையும் அனைத்துக்கும் மேலாகத் தேசபக்தியையும் ஊட்டக்கூடிய ஒரு நேர்மையாளனைப் பெருந்தலைவனாகக் கொடுத்து உதவு.

அத்தகைய ஊக்கமளிக்கும் தலைமைக்காக நாங்கள் ஏங்கித் தவித்துக் காத்திருக்கிறோம்.

1981 பிப்ரவரி 22

ரௌத்திரி மாசி 11

மலர் : 39 இதழ் : 30



கல்கி



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# வஸந்த்! வஸந்த்!

## சுஜாதா

### 8. கத்திக்குத்து

மெல்லமெல்ல கூட்டம் சேர்ந்துகொள்ள ஆரம்பித்தது. கூட்டத்தின் நெருக்கத்தில் பிறகு எதுவும் செய்ய முடியாது; மிக விரைவில் ஏதாவது செய்தாக வேண்டும். அவசரம். கணேஷ் அந்த உடலை அப்புறப் படுத்துவதற்குத் தயங்கினான். கிராமத்தின் போலீஸ் அமைப்பில் சிக்கல்கள் இருக் கலாம். ''வஸந்த் க்விக் காரை எடு.''

''பாஸ் உயிர் இருக்கற மாதிரி தெரியுது! ஏம்ப்பா இங்க பக்கத்தில ஆஸ்பத்திரி எங்க இருக்கு?''

''மாட்டாஸ்பத்திரிங்களா?'' ஸ்டார்ட் டரை நான்கைந்து முறை இயக்கியும் பய னில்லை.

''மனுஷாஸ்பத்திரிப்பா! பாஸ் ஃப்ளாட் ஆயிருக்கு; கார் சண்டி பண்ணுது.''

''யாருங்க இந்தாளு?''

''செத்துட்டான் அண்ணாச்சி.''

''அல்லடா மூச்சு வருது.''

கணேஷ் தீர்மானித்து அவனை நிமிர்த்தினான். ''வஸந்த்! போலீஸ் ஸ்டேஷன் எங்கன்னு முதல்ல விசாரி. அந்த மாட்டுவண்டியை நிறுத்துங்க.''

''யோவ் மாட்டு வண்டி கொஞ் சம் வரியா?''

''கத்திக்குத்து! அம்சமா குத்திருக் குதுங்க.''

''செத்த பொணமா? நான் மாட் டங்க.''

''யோவ் சாவு கிராக்கி. இன்னும் ஆளு சாகலிய்யா. தூக்குடாடேய்!''

''புஸ்ஸு புஸ்ஸுன்னு மூச்சு உடறதைப்பார்த்தா பண்ணண்டு மணிக்குள்ற போடுவான்யா.''

''இல்லே, நீங்க பேசி முடிக் கிறதுக்குள்ளயே போய்டுவான். தூக்குய்யா!'' என்றான் வஸந்த். கணேஷ் அந்த முதுகின் கத்திக்குத்தைப் பார்த்தான். ரத்தம் கட்டி தட்ட ஆரம்பித்திருந்தது.

''பாஸ் வசமா கிராமத்துல மாட்டிக்கிட்டம். ஏம்ப்பா இந்தப் பக்கம் தங்கற ஓட்டல் நல்லதா இருக்கா?''

''அதுக்கு டவுனுக்குப் போயிருங்க. என்னங்க ஆச்சு? ஏதாவது நிலத் தகராறு? குத் திப் போட்டாங்களா? இந்த ஊர்ல இது சகஜமுங்க.''

வண்டியின் முன் பகுதியில் வஸந்த் ஏறிக் கொள்ள கணேஷ் அந்தத் தெரு அத்தனை



பேருடனும் பின் தொடர்ந்தான். தெருக் கதவுகள் ஜன்னல்கள் எல்லாம் உயிர் பெற்றுப் பளிச்சென்று பெண்முகங்கள் எட்டிப் பார்த்தன.

கணேஷ் அருகே நடந்த சற்றே வயதானவரிடம் ''ஏங்க இங்க சதாசிவம்னு யாரும் இருக்காங்களா?'' என்றான்.

''இதோ! ஏ சதாசிவம்!''

குறிப்பிட்ட சதாசிவம் அருகே வந்தான். சின்னப் பையன் பத்து வயதிருக்கும்.

''இவன் இல்லிங்க. வேற சதாசிவம்.''

''யாரைச் சொல்றீங்க? ஊர்ல எட்டுநூறு சதாசிவம் இருக்காங்க.''

கணேஷின் ஞாபகத்தில் அந்த அரைகுறை வாக்கியம் வெட்டியது. ''சதாசிவம்னு ஒத்தரை.''

''இங்க அந்தப் பேர்ல ஊர்ப் பெரிய மனுசங்க யாராவது இருக்காங்களா?''

''டாக்டரையா பேரு சதானந்தம்.''

''சதாசிவங்களைச் சொல்லுங்க முதல்ல.''

''லோக்கல் பண்டு ஆஸ்பத்திரி அந்த எமர்ஜென்ஸிக்குத் தயாராக இல்லை. டாக்டர் சாப்பிடப் போயிருந்தார். உதவியாளர் லீவில் இருக்கிறாராம். நர்ஸ் இன்னும் போஸ்ட் ஆகவில்லையாம்.

''பின்ன நீங்க யாரு?''

''நான் இங்க வைத்தியம் பார்த்துக்க வந்தவங்க.''

''நாசமாப் போச்சு! பாஸ் இவன் காலி. ஏன்யா, அடுத்த ஆஸ்பத்திரி எவ்வளவு தூரம்?''

''யாருப்பாது? ஆளு புதுசா இருக்கு'' என்று ஒரு அதட்டுக் குரல் கேட்டது. கிராமத்தின் போலீஸ் தொப்பி தென்பட்டது.

''வாங்க'' என்றான் வஸந்த்.

''ஒதுங்குடா. என்ன கூட்டம் போட்டுக்கிட்டு! பட்டணத்துக் காரங்கன்னுங்களே நீங்கதானு? ''

''ஆமாங்க.''

''என்னமா நீங்கப் பாடியை எடுக்கப் போறாரும்?''

கான்ஸ்டபிளுக்கு நாற்பது வயதிருக்கும். கிராமத்திலேயே பிறந்து வளர்ந்து மணந்து பழசாகிப் போன ஆசாமி என்று தோன்றியது. ரூல்ஸ் அவருக்கு தெரிந்திருக்க அவசியமில்லை.

''ஆளு அடி பட்டிருக்கான்! ரத்தம் கொட்டுது. உசிர் இருக்கு. அப்படியே போட்டுட்டு 'வந்திருக்கணும்ங்கிறீங்களா?''

''அதுக்கூடச் சரிதான்'' கான்ஸ்டபிள் குத்துப் பட்டவனை அணுகி ''யோவ் யாருய்யா நீ'' என்றார் அதிக ரத்த சேதத்தால் அவன் அரை மயக்கத்தில் இருந்தான். ''இந்தாளு யாருன்னு யாருக்காவது தெரியுமாய்யா?''

சுற்றுப்பட்டவர்கள் மௌனமாக இருந்தார்கள். ''வெளியூராளு மாதிரி தெரியுது அண்ணே.''

''என்ன பாடாவதியோ! யோவ் உன்னைக் குத்தினது யாரு சொல்லு.''

அருகே கணேஷ் செல்ல அவன் உதடுகள் லேசாக அசைந்தன. கணேஷ் உன்னிப்பாகக் கேட்டான்.

''கிணறு! கிணறு!''

''என்ன கிணறு?''

''கிணத்தில... கிணத்தில....'' — அதை முடிக்க முடியாமல் சோர்வு அவனை ஆக்ரமிக்க அவன் கண்கள் மூடிக்கொண்டன.

''கிணத்தில என்ன?''

''தெரியலேயே.''

''வாங்க டாக்டரய்யா இந்தாளைப் பாருங்க.''

டாக்டர் சமீபத்தில் போஸ்டிங் ஆன இளைஞன் போலத் தெரிந்தான். ''ஓ காட் ஹி இஸ் ப்ளீடிங்! ஒதுங்குய்யா, ஒதுங்குய்யா என்ன கூட்டம்!''

''பொழைக்குமா போயிருமா?''

''சொல்ல முடியாது. நீங்கள்ளாம் வெளியில போங்க.''

கணேஷ் வஸந்துடன் வெளியே வந்தான்.

''பாஸ்! மறுபடி கிணறு துரத்துது!'' வஸந்த் சிகரெட் பற்ற வைத்துக் கொண்டு ஈச்சமரத்தின் சிக்கனமான நிழலில் நின்றான்.

''அவனுக்கு ஏதோ தெரியக் கூடாதது தெரிஞ்சிருக்கு.''

''அபாயகரமானது.''

''குத்தினவனைப் பார்த்தியா வஸந்த்?''

''ம்ஹூம். முடியவே இல்லை. பக்கத்தில ஒரு சந்து. அதில மறைஞ்சிண்டிருந்திருக்கணும். நான் பார்த்தபோது பின்னால ஒரு ஈ இல்லை. ஒருவேளை.....''

''ஒருவேளை?''

''கத்தி பின்னாலே எங்க இருந்தாவது எறியப்பட்டதோ என்னவோ.''

''இருக்கலாம்.''

''பாஸ்!'' என்று வஸந்த் தன் முதுகுப் பக்கம் கை செலுத்தித் தடவிக் கொண்டான்.

''நம்ம முதுகிலே ஏதாவது கத்தி கித்தி தொத்திக்கிட்டிருக்கா பாருங்க!''

''அதுக்கு இன்னும் கொஞ்சம்





சமயம் ஆகும்னு தோணுது. ஹெறு! ஹெறு! எந்தக் ஹெறு வஸந்த்?''

''அதான். நம்ம ராராதான்.''

''அந்தாளு பிழைக்கணும் வஸந்த்.''

''ம்ஹூம். டாக்டரைப் பார்த்தா நம்பிக்கையாத் தெரியலே. பல்ஸ் பாக்கறப்ப இவனுக்கு பல்ஸ் எகிறுது.''

''என்னவனு?''

''முப்பது வயசிருக்கும் பாஸ். பாடில வலு இருந்தாப் பிழைச்சுப்பான். ரத்த சேதம் நிறைய ஆயிடுச்சு. ரத்தம் குடுக்க வேண்டியிருக்கும். இந்த ஆஸ்பத்திரிலே குடுத்தாலும் எடுத்துக்க வசதி இருக்காது. ஏதாவது ஹெட் குவார்ட்டர்ஸ் ஆஸ்பத்திரிக்கு எடுத்துட்டுப் போக வேண்டியிருக்கும்.

''காஞ்சிபுரத்துக்குக் கூட்டிட்டுப் போருங்களோ என்னவோ.''

''கூட்டிட்டு எங்கே? எடுத்துட்டுத்தான் போக முடியும்.''

''வஸந்த்! அவனை எப்படியாவது பேச வெக்கணும். அவன் என்ன சொல்ல வந்தான்னு நமக்குத் தெரிஞ்சே ஆகணும்.''

''வாங்க பாஸ். டாக்டரைக் கேட்கலாம். எனக்கென்னவோ அந்தாளு வெட்டர்னரி டாக்டரோன்னு சந்தேகம். ஊசியைப் பார்த்தாப் பெரிசா இருக்கு.''

''ஒரு ஆளு உயிருக்கு மன்றாடிக்கிட்டிருக்கிறபோது இந்த மாதிரி அறுவை ஜோக் அடிக்கிறது எனக்குக் கட்....''

''போடா பிடிக்கலே. அதானே? ஸாரி. இப்ப ஸீரியஸ். இந்த விவகாரத்தை விடறதில்லே. அங்கங்க முதுகில ஒண்ணு ரெண்டு கத்தி குத்தினு என்ன? எடுத்துட்டு வேற வேலையைப் பார்க்கிறது! ஸாரி! மறுபடியும் ஜோக்கடிக்கிறேனில்லே?''

''நீ சாவறத்துக்கு முன்னாடி கூட ஜோக் கடிச்சுட்டுத்தான் செத்துப் போவே! வாடா.''

அவர்கள் மறுபடி ஆஸ்பத்திரியின் முன்னறைக்குச் சென்றபோது கத்திக் குத்தாளி மல்லாந்து படுத்திருந்தான். மூச்சு லேசாக வருவதைக் கணேஷ் கவனித்தான்.

''ஊண்டை டிரஸ் பண்ணிட்டேன். நிறைய ரத்தம் இழந்திருக்கான். இவனுக்கு இப்ப ரத்தம் கொடுத்தாகணுமே.''

''இந்த ஊர்ல டெலிபோன்னு ஏதாவது சமாசாரம் உண்டுங்களா கான்ஸ்டபிளய்யா?''

''இருக்குங்க. அதுக்கு முன்னாடி நீங்க யாரு, என்ன போக்கு வரத்து எல்லாத்தையும் துப்புரவாச் சொல்லிப் போடுங்க. தேவை ரிய்ஸ்தர் பண்ணிக்கணும் பாருங்க.''

''அதெல்லாம் அப்புறம் பண்ணிக்கலாங்க. முதல்ல ஆளு பொழைக்கிற வழியைப் பார்க்கலாமா?''

''அதுகூடச் சரிதாங்க! இருங்க. பி.டி.ஓ. ஜீப்பு இருக்கா பார்த்துக்கிட்டு வர்றேன். இருந்தா சௌரியமாப் போயிரும்.''

''சீக்கிரம் வாங்க.''

''நீங்க எங்கேயும் போயிராதிங்க, பட்டணத்துக்காரவங்களே.''

''போகலே. துப்புரவா விசாரிக்க வேண்டாமாங்க!''

''அதானே!''

''டாக்டர்! பேஷண்ட் எப்படி இருக்கான்?''

''ப்ச்! சொல்ல முடியாது.'' என்று டாக்டர் ஒரு மாத்திரையை விழுங்கிக் கொண்டார்.

''அப்புறம் ஏதாவது பேசினானு?''

''இல்லே. கான்ஸ்டபிள்தான் ஏதேதோ கேட்டுக்கிட்டிருந்தாரு. சத்தம் போட்டு. ஒத்துய்யான்னேன்.''

கணேஷ் படுத்திருந்தவன் பக்கத்தில் சென்றான். குடு பார்த்தான்.

''தொடாதீங்க! போலீஸ் கேஸ்.''

''இவன் பேசியே ஆகணும் டாக்டர்.''

''எப்படி ஆச்சு?''

''எது?''

''கத்திக் குத்து.''

''சரியாத் தெரியலே டாக்டர். நாங்க பாட்டுக்குக் கார்ல உக்கார்ந்துக்கிட்டிருந்தோம். திடீர்னு எங்க மேலே தலை குப்புற விழுந்தான். திரும்பிப் பார்த்தா ரத்தம் - கத்தி. ரொம்பக் கோவக்காரப் பயலுவ. எதுக்கெடுத்தாலும் கத்தி.''

கணேஷ் கத்தியைப் பார்த்தான். ரத்தம் உறைந்திருந்தாலும் அதன் கூர்மை புரிந்தது. நீளம் தெரிந்தது, பளபளப்பு அச்சுறுத்தியது. சமையலறைக் கத்தி இல்லே அது. முதுகுகளேயும் மார்புகளேயும் குத்துவதற்கென்றே ஏற்பட்ட கெட்ட கத்தி அது. என்ன சொல்ல வந்தான்? யார் அவன்?

''லோகல் ஆளில்லேன்னு தெரியுது. பைக்குள் பஸ் டிக்கெட் வச்சிருக்கான்.''

''டாக்டர்! இவன் பையை நாங்க பார்க்கலாமா?''

''கான்ஸ்டபிள் வந்தா காச் மூச்சன்னு கத்துவான்யா!''

''அவர் வர்றதுக்குள்ளே...''

''நீங்க யாருன்னு தெரியலேயே?''



## உடுப்பி கிருஷ்ணர் கையில் மத்து எப்படி வந்தது ?

யசோதை தயிர் கடைவதற்கான ஆயத்தங்கள் செய்து கொண்டிருந்தபோது அருகில் இருந்த கிருஷ்ணன் வெண்ணெய் எடுத்தவுடன் தனக்கும் கொஞ்சம் தரவேண்டும் என்கிறான். 'உனக்கு இப்பொழுது வெண்ணெய் கிடையாது. போய் விளையாடு' என்று பணிக்கிறாள் தாய். குழந்தைக்கே உரிய கோபத்துடன் அருகில் கிடந்த மத்தை எடுத்து வைத்துக்கொண்டு தனக்கு வெண்ணெய் தருவதாக ஒப்புக் கொண்டாலே மத்தைத் தரமுடியும் என்கிறான் கிருஷ்ணன். அவ்வாறு எடுத்து வைத்துக்கொண்ட மத்தே அது.

- ரா. விஸ்வநாதன்

# இதோ இன்க்ரிமின் தலைமுறை

## பெரிதாக மட்டுமல்ல சிறப்பாக வளர!




வளரும் பருவத்தில் மிகமிகப் பெரிய வேறுபாட்டை வழங்குவது இன்க்ரிமின். உண்மையென்னவெனில் இதர டானிக்குகளை விட ஒரு படி மேலானது இன்க்ரிமின். ஆரோக்கியமான வளர்ச்சிக்குத் தேவையான வைட்டமின்களோடு கூட இன்க்ரிமின் டானிக்கில் லைஸின் உள்ளது. லைஸின் பசியைத் தூண்டுகிறது. ஒரு குழந்தை நன்கு வளர, நன்கு சாப்பிட வேண்டும் என்பது எந்தத் தாய்க்குத்தான் தெரியாது?

சிறப்பாக உண்பதை சீரிய வளர்ச்சியாக்குவது இன்க்ரிமின்.

Lederle தயாரிப்பு

*அமெரிக்கன் ஸையனமிட் கம்பெனியின் ரெஜிஸ்டர்டு ட்ரேடு மார்க்




## இன்க்ரிமின்* டானிக்

## சிறப்பாக உண்பதை சீரிய வளர்ச்சியாக்குகிறது.

Sista's-INC-973/80 Tam. G

அவள்: காண்டாக்ட் லென்ஸ் போட்டப்புறம் உன் வீட்டுக்காரர் ஆளோடே மாறிப் போயிட்டாருக்கறையே, உன்னைக் கவனிக்கறதில்லையா?

இவள்: முன்னே 'என் கண்ணே, என் கண்ணே'ன்னு என்னைக் கொஞ்சிக்கிட்டிருந்தவர் இப்ப என் 'காண்டாக்ட் லென்ஸே'ன்னு கொஞ்ச ஆரம்பிச்சுட்டார்.

- கே. ஆர். எம்.



''நாங்க ரெண்டு பேரும் லாயர்ஸ். மெட்ருஸ்காரங்க.''

''உங்களுக்கு டி. எம். எஸ். ஆபீஸ்ல யாரையாவது தெரியுமா?''

''டைரக்டரையே தெரியும்.''

டாக்டரின் சுபாவத்தில் ஒரு மின்னல் மாற்றம் ஏற்பட்டது. ''உக்காருங்க. உங்க பேர் என்ன?''

''வஸந்த்.''

''என்ன பாக்கணுமோ பாத்துக்கங்க.''

கணேஷ் படுத்திருந்தவனை அசைத்தான். காவி நிறத்தில் பூப்பூ சட்டை. நெற்றியில் குங்கும லேகை. ப்ராண்ட் காலோரத்தில் நூல். கூந்தல் எண்ணெய் படிந்து சமீப வீழ்ச்சியின் காரணத்தால் புழுதியும் ரத்தமுமாக இருந்தது.

வஸந்த். ''உங்களுக்கு எந்த ஊருக்கு டாக்டர் மாத்தல் வேணும்?'' என்றான்.

கணேஷ் அவன் சட்டைப் பையைக் காலி செய்தான். டி.டி.வி. யின் பஸ் டிக்கட், ஓர் அழுக்குக் காகிதத்தில் மொத்தம் செலவு செய்த ரூபாய் நாப்பத்து ஏழு அறுபதுக்கு முழுமையான கணக்கு. ''தஞ்சாவூர் ப்ராப்பர்லே இடைச்சதுன்னு நல்லதுங்க.''

போஸ்ட் கார்டு. 'அன்புள்ள அண்ணன் அவர்களுக்கு' என்றது. விலாசத்தைப் பார்த்தான். ஆதம்பாக்கம். ஆள் யாரென்று அறிந்து கொண்டு விடலாம்.

''அதான் டாக்டர் உங்களுக்குச் சௌகரியம். நாலு வருஷம் கவர்ன்மெண்ட் உத்தியோகம் பார்த்துட்டுப் பளிச்சுனு க்ளினிக் வெச்சுடலாம்.''

'சதாசிவம் முதலியார் தெரு. போஸ்ட் உக்கல் வ. ஆ. மாவட்டம்.'

''டைரக்டரையேவா தெரியும்னிங்க?''

''பின்னே?''

வெறும் விலாசம் மட்டும். கணேஷ் அந்தத் தபால் கார்டை எடுத்துக் கொண்டான். வெளியே ஜீப் அரவம் கேட்டது. கணேஷ் அவசரமாக அறையை விட்டு விலகினான்.

''காஞ்சிபுரமே எடுத்துட்டுப் போயிறலாங்க.''

''ஆளு யாருன்னே இன்னும் தெரியலியே!''

''நிச்சயம் வெளியூர்க்காரன்.''

''இதோ இவங்ககூட வெளியூருதான். நீங்கள்ளாம் எந்த ஊரு?''

''மெட்ருஸ்தாங்க'' என்றான் வஸந்த்.

''இந்தச் சீட்டை ஆஸ்பத்திரியிலே காட்டுங்க. உடனே வைத்தியம் பார்ப்பாங்க.'

டாக்டரிடம் சீட்டைப் பெற்றுக் கொண்டு கணேஷ் - வஸந்தைத் தீர்மானமில்லாமல் பார்த்தார் கான்ஸ்டேபிள். ''நீங்க போயிட்டு வாங்க. நாங்க இந்த இடத்தை விட்டு நகர மாட்டோம்.''

''ஏய்யா! கார்ல வந்தீங்களாமே ரெண்டு பேரும்? அதை அப்பவே சொல்லக் கூடாது? ஜீப்புக்கு அல்லாடறேன்.''

''கார் ரிப்பேர் ஏட்டய்யா. முக்கி முக்கிப் பாத்தாங்க. பொவகூட வல்ல.''

''அதனாலதான் சொல்றேன். நாங்க எங்கயும் வெளிய போயிற மாட்டோம். நீங்க காஞ்சீபுரம் போயிட்டு வாங்க.''

''அதுகூடச் சரிதான்.'

''இல்லே வஸந்த்! நாமும் கான்ஸ்டபிள் கூடப் போயிட்டு வந்துறலாம். அவருக்கு நம்ம மேலே சந்தேகம் ஏதும் வரக் கூடாது பாரு.''

''அதுகூடச் சரிதான்.''

கணேஷ் வஸந்தைத் தனியே அழைத்து. ''அவன் மயக்கம் நீங்கி மறுபடி பேசறபோது கூட இருக்கணும்'' என்றான். வஸந்த் குரலைத் தாழ்த்தி. ''அதுகூடச் சரிதான்'' என்றான்.

''கார் ஃப்ளடிங் சரியாப் போயிருக்கும் பாஸ்! பார்த்துட்டு வந்துர்றேன். சரியாப் போயிடுச்சுன்னு அதையே எடுத்துட்டுப் போயிறலாம்.''

வஸந்த் ஆஸ்பத்திரியிலிருந்து கார் நின்று போயிருந்த இடத்துக்குச் செல்லும் வழியில் இனியாவைப் பார்த்தான். (தொடரும்)

## திருவுளச் சீட்டு மூலம் திரையுலகப் பிரவேசம்!

ஒருதலை ராகம் படத்திற்கு முதல் பரிசீலனையில் கதாநாயகனுக்குத் தேர்வு பெற்றவர்களின் எண்ணிக்கை பத்து. இறுதியாக யாரைத் தேர்ந்தெடுப்பது என்ற பிரச்னைக்குத் தயாரிப்பாளர் கண்ட விடை திருவுளச் சீட்டு முறை!

திரையுலகுக்குத் திருவுளச்சீட்டு மூலமாக அறிமுகமான முதல் நடிகர் சங்கர் தான். - அன்பு





இதோ பெவிலியனிலிருந்து இருவர் வருகிருர்களே, இதில் யார் ஜேன்? யார் ஜில்?

''மேடம்! எங்களுக்கு யார் காப்டன் ஜில், யார் ஜேன் என்று தெரியவில்லே. நீங்களே சொல்லிவிடுங்கள்!'' என்று இரட்டையரிடம் தோல்வியை ஒப்புக் கொள்கிரேம்!

''இந்தக் குழப்பம் நான் பள்ளிக்கூடம் படித்த காலத்திலேயே உண்டு! நான் செய்யாத தவறுக்காக, என் தலைமை ஆசிரியரிடம் வேண்டிய வசவுகளைப் பெற்றுக் கொண்டேன்! பிறகு தலைமை ஆசிரியர் நான் ஜில் அல்ல ஜேன் என்று உண்மையை அறிந்து வருத்தப்பட்டுக் கொண்டார்!''

ஜேன் பவல் கழுத்தில் தங்கச் சங்கிலியில் சிலுவையைத் தொங்கவிட்டுக் கொண்டிருக்கிருர் என்றல் காப்டன் ஜில் பவல்லும் ஒரு வெள்ளிச் சங்கிலியை அணிந்திருக்கிருர். குழப்பக் குளறுபடிகள் உருவ ஒற்றுமையின் காரணமாய் நிறைய நிகழ்வது சகஜம்!

சிதம்பரம் ஸ்டேடியம் ஸ்கோர் போர்டில் 1. Jl. Powell 5. Jl. Powell என்றே காணப்படுகிறது!

''பாருங்கள்! உங்கள் ஸ்கோர் போர்டே குழப்பத்தை நிறைய உண்டு பண்ணுகிறது. நான் உயிரை விட்டு நன்ருக 'பௌல்' செய்தாலும் அத்தனை பெருமையும் காப்டன் பவலுக்குப் போய்ச் சேர்ந்து விடுகிறதே!'' என்ருர் ஜேன் பவல் சிரித்துக் கொண்டே!

• • •

''பார்த்தீர்களா ம. பொ. சி. பெண்கள் கிரிக்கெட் டெஸ்ட் பார்த்துக்கொண்டே கமெண்டரியும் கேட்டுக்கிட்டு இருக்காரு!''

''இப்போ பெண்கள் கிரிக்கெட் டெஸ்ட் ரன்னிங் கமெண்ட்ரி இல்லே! ஆஸ்திரேலியா டெஸ்ட் கமெண்டரியைத் தான் கேட்டுக்கிட்டு இருக்கிருர்!''

• • •

காப்டன் ஜில் பவல் லண்டன் நகராட்சியில் பொழுது போக்குத் துறையில் அதிகாரி. ஆல் ரௌண்டர்! 1977-78ம் வருஷம் அவர் இந்தியாவுக்கு வந்திருக்கிருர். நெட் பால்.

1. கார்க்கிலின் அபார பாட்டிங் (படம்: பாலாஜி) 2. காப்டன் சாந்தா ரங்கசாமி 3. சூஸன் இட்டிசாரியா 4. பௌலி கலீலீ 5. சுதா ஷா





# மெல்போர்னில் 'செஞ்சுரி', சேப்பாக்கத்தில் எதிரொலி!



அருள்வாக்கு

## குழந்தைகள் ஸ்வாமி!

குழந்தைகள் ஸ்வாமியை 'உம்மாச்சி' என்றே சொல்லும். குழந்தைகளின் பரம் பரையில் சில தனி வார்த்தைகள் உண்டு. இவை ஆயிரக் கணக்கான வருஷங்களாக வந்து கொண்டிருக்கின்றன. பெரியவர்களின் வார்த்தைகளும் அவற்றின் அர்த்தங்களும் மாறும். குழந்தை மொழி மாறுவதில்லை. 'உம்மாச்சி' என்ற குழந்தை மொழிக்கு ஸ்வாமி என்றுதான் அர்த்தம். என்னிடம் குழந்தைகளை அழைத்து வருகிறவர்கள்கூட 'உம்மாச்சித் தாத்தாவுக்கு நமஸ்காரம் செய்' என்று அவற்றிடம் சொல்லக் கேட்டிருப் பீர்கள். 'இதென்ன உம்மாச்சி? இதன் சரி யான மூலம் என்ன?' என்று யோசித்துக் கொண்டிருந்தேன்.

திருச்சி மலைக் கோட்டைக்குப் போயிருந் தேன். அங்கே உள்ள கோயில் ஸ்ரீ பாதந் தாங்கிகளில் திருநல்லத்திலிருந்து (கோனேரி ராஜபுரம்) வந்திருக்கிறவர்களும் இருந்தனர். அவர்களில் ஒருவரை இன்னொருவர் 'உம மாச்சு' என்று கூப்பிடுவதைக் கேட்டேன். திருநல்லத்தில் ஸ்வாமியின் பெயர் உமா மகேஸ்வரன் என்பது. எனக்கு உடனே விஷயம் பளிச்சென்று புரிந்தது. உம்மாச்சு, உம்மாச்சி எல்லாம் உமாமகேசுவரனைக் குறிப் பனவே என்று தெரிந்து கொண்டேன். ஆக குழந்தைகளின் பாஷையிலிருந்தே மிகப் பழங் காலத்திலிருந்து உமா தேவியுடன் சேர்ந்த மகேஸ்வரனைத்தான் ஸ்வாமியாக நினைக்கிறார்கள் என்பது தெரிய வந்தது.

–ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேக ரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

பாட்மிண்டன் ஆட்டங்களிலும் விருப்ப முண்டு. இதார் வாசிப்பதென்றால் இவருக் குக் கொள்ளை ஆசை!

ஜேன் பவல் உடற்பயிற்சி ஆசிரியை. இவருக்கு ஹாக்கி நன்கு ஆடத் தெரியும். இதார் வாசிப்பதிலும் கெட்டிக்காரி. குழந் தைகள் என்றால் கொள்ளைப் பிரியம்!

இவர்களது தந்தை டோனி பவல் வீக் கிரிக்கெட் ஆட்டக்காரர். ஷெப்பீல்டு கிரிக்கெட் மைதானத்துக்குத் தந்தையுடன் சென்ற இரட்டையர்களுக்கு, கிரிக்கெட் ஆடுவதில் அக்கறை பிறந்தது!

• • •

தமிழக அணியைச் சேர்ந்த சூஸன் இட்டிச் சார்யா கடிகாரத்தைத் தூக்கி எறிகிறார்! ஜேன் பவுல் பத்திரமாக அதைப் பிடிக்கிறார்!

''ஏய் சூஸன்! நீ இரண்டு அருமையான காட்ச் பிடிச்ச சந்தோஷத்திலே இப்படி என்னை டெஸ்ட் பண்ணிப் பார்க்கிறாயோ? இது காஸ்ட்லி அஃபேர்! டோண்ட் டூ இட் அகெய்ன்!'' என்கிறாள் ஜேன்.

• • •

இந்திய அணி காப்டன் சாந்தா ரங்கசாமி அடிக்கடி பிரஸ் பாக்ஸுக்கு வந்து போய்க் கொண்டிருந்தார். ஆட்ட நுணுக்கங்களையும் ஆட்ட விவரங்களையும் சேகரித்துச் சென்று கொண்டிருந்தார் கட்டுரை எழுதுவதற்கு. அவர் ஸ்போர்ட்ஸ் எழுத்தாளரும் கூட!

• • •

பெவிலியனில் அத்தனை பேரும் ஆரவாரத் துடன் கைதட்டி மகிழ்கிறார்கள். ஆனால் மைதானத்தில் எந்தவித அற்புதத்தையும் காணோம்!

''எதற்கு இந்த ஆனந்தம்?'' என்று சந் தேகத்துடன் கேட்டார் ஜேன் பவல்.

''மெல்போர்னில் விசுவநாத் செஞ்சுரி போட்டுட்டாரு! அதற்குத்தான் இத்தனை ஆரவாரம்!''

''இவங்க எல்லோரும் எங்க மாட்சைப் பார்க்க வந்திருப்பதையே மறந்துட்டாங்க போலிருக்கே!'' என்றார் ஜேன் பவல்!

அந்தச் சமயம் பார்த்து இங்கிலாந்துக் குழுவில் ஜேனெட், டெஸ்ட்ஸ்டோன் அரைச் சதத்தைத் தாண்டவே இரட்டையர் இரு வரும் உற்சாகமாய்க் கைதட்டி ஆரவாரித் தார்கள்!

• • •

மூன்று டெஸ்ட் 'டிரா'; இந்திய அணியில் கார்கி பானர்ஜி பிரமாத பாட்டிங்; சுபாங்கி குல்கர்ணியின் அபார பௌலிங்; கூட்டமே இல்லாத டெஸ்ட், நிர்வாகிகளுக்குக் கையைக் 'கடி'த்து விட்டது! ஆயினும் தமிழகப் பெண்கள் கிரிக்கெட் சங்கம் துணிச்சலோடு டெஸ்டை நிர்வகித்தது சாதனையே!

— குண்டுமணி

## 16

மருத்துவமனை வராந்தாவில் போய் உட்கார்ந்தால் போதும் அதுவரை உடம்பு தாக்குப் பிடிக்க வேண்டுமே என்கிற வேதனையுடன் தான் புறப்பட்டிருந்தாள் சுமங்களா.

ஆட்டோவுக்குப் பணம் கொடுத்து அனுப்பினாள். அவுட் பேஷண்ட்கள் பெஞ்சியில் அசதியுடன் அமர்ந்தாள். நினைவு அவ்வளவு தான்!

கண் முன் எல்லாக் காட்சிகளும் திரைக்கு அப்பால் தெரிவது போல் ஓர் உணர்வு. பேச்சுக்கள் காதில் விழவில்லை. மௌனப் படம் போல் மனிதர்கள் நடமாட்டம்.

வெள்ளை உடை நர்ஸ்கள்... ஒவர் கோட் அணிந்த டாக்டர்கள்... தள்ளு வண்டியில் அவளைப் படுக்க வைத்துத் தள்ளிக் கொண்டு'போவது... எல்லாமே — ஒரு கனவு உணர்வுகள்!

''உன் பேர் என்னம்மா?''

யாரோ முகத்துக்கு நேராகத்தலை குனிந்து கேட்கிறார்கள்.

அந்தக் கேள்வியை அவள் காதில் வாங்கிக் கொண்டபோது எத்தனை மணி நேரம் இப்படி உணர்வற்றுக் கிடந்தாள் என்பது அவளுக்குத் தெரிய நியாயமில்லை.

''இந்தக் காயங்கள் எப்படி ஏற்பட்டன? உடம்பில் காயம் படாத இடமே இல்லையே''

'இவர்களிடம் சொல்லலாமா? இவர்களிடம் சொல்லி என்ன பிரயோஜனம்?'

உடம்பில் பல இடங்களில் மெழுகு போன்ற மருந்து; பிளாஸ்திரி; கைகால்களில் பேண்டேஜ்! நெஞ்சு வலி அதிகரித்துக் கொண்டே இருந்தது. திக்கித் திணறி இருமினாள்.

''மாடிப்...படி... யிலிரு...ந்....து....''

நெஞ்சு வலி! தலை சுற்றல்! தளர்வு! பலவீனமான மூச்சு....

அவளிடம் அதற்குப் பிறகுயாரும் ஒன்றும் பேசவில்லை. அவளுக்கு உடல் வலி... மருந்துப் பரவல்.... மயக்கம்... மயக்கம்...நெஞ்சு வலியின் உபாதை!

கோமதியை மாடர்ன் டிரைக்ளீனிங்கை எல்லாம் முழுமையாக நினைவுக்குக் கொண்டு வர ஒருவாரம் ஆகி விட்டது.

அன்று காலையில் விழிக்கும் போதே சற்றுத் தெளிவுடன் விழித்தாள் சுமங்களா. பிரகாசமான மருத்துவ மனையின் வராந்தாவின் கண்ணாடி ஜன்னல்கள் எல்லாம் காற்றுக்காக நன்றாகத் திறந்து விடப்பட்டிருந்தன.

உணர்வு தெரிந்தது. வாசனை தெரிந்தது. சத்தம் கேட்டது. அருகில் அவளது உடைமைகள் என்று, அவள் வரும் போது கொண்டு வந்த டம்பப் பை மட்டும் இருந்தது. மற்றவை யாருடையவை?

பிளாஸ்க்... கூஜா ... கூடையில் ஆரஞ்சுப் பழங்கள்.....

இவை அடுத்த படுக்கையில் உள்ள பெண்மணிக்குச் சொந்தமானதாக இருக்கலாம்...

ஒரு வேளை கோமதிக்குத் தெரிந்து, அவள் தான் இவைகளைக் கொண்டு வந்து வைத்திருப்பாளோ?

டாக்டர் வந்தார்; அவளைப் பரிசோதித்துப் பார்த்தார். மேல் காயங்களெல்லாம் மெதுவாக ஆறிக் கொண்டிருந்தன.

வார்ட் நர்ஸ் சிரித்துக் கொண்டே படுக்கையினருகில் வந்து நின்றாள்.

''எப்படி இருக்கீங்க?''

''நீங்கதான் சொல்லணும்.''

''இன்னும் ஒருவாரம் பூரண ஓய்வு எடுத்துக்கணும்.'' நர்ஸ், தலைமாட்டில் கலைந்து போயிருந்த தலைகாணிகளைச் சரி செய்து வைத்துக் கொண்டிருந்த போது, சுமங்களா கேட்டாள்.

''நர்ஸ் ... இதோ இங்கே இருக்கும் பிளாஸ்க், பால் கூஜா ... இவையெல்லாம் யாருடையவை?''

''ஓ! அதுவா .... ப்ரொட்யூஸர் நீலமேகத்தின் பெண் அம்பிகாவினுடையது.''

''நான் இங்கே இருப்பது அவங்களுக்கு எப்படித் தெரியும்?''

''நீங்க இங்கே அட்மிட் ஆன பின்பு உங்களைப் பற்றிய தகவல் தெரிய வேண்டியிருந்தது. உங்க வேனிடி பேக்கிலே ஒரு போன் நம்பர் மட்டும் இருந்தது. அதற்குப் போன் செய்தோம். 'உங்க போன் நம்பர்தான் அவங்க பையிலே இருந்தது. பேஷண்ட் யார் என்று தெரியவில்லை. அன் கான்ஷியஸா இருக்காங்க. ஒரு நிமிஷம் வந்து பார்த்தீங்கன்னு உங்களுக்கு ஒருவேளை தெரியலாம்' என்றோம். அவங்கதான் கார் போட்டுக்கிட்டு வந்தாங்க. அவங்க சொல்லித்தான் உங்கள் பெயர் தெரியும்.''

''அம்பிகாவா?''

நர்ஸ் நகர்ந்து விட்டாள்.

'அம்பிகா....!' அவள் கண்கள் கலங்கின.

அவள் தன்னைப் பற்றி யாரிடமும் சொல்லிக் கொள்ள விரும்பவில்லை. ஹாஸ்டல் அறையைக் கூட உடனே காலி செய்துவிட்டுக் கோமதியின் பிணைப்பிலிருந்து விடுபட எண்ணியிருந்தாள்.

பரமேஸ்வரன், அவள் எதிர்பார்த்ததற்கும் மேல் ஒரு ரௌடியாக இருக்கிறான் என்பதை அந்த ஒரே நாளில் தெரிந்து கொண்டு விட்டாள். அவளுக்கு உதவுகிறவர்களைக் கூட அவன் மிரட்டுகிறவன் என்கிற சந்தேகம்



அவளிடம் வலுப்பட்டது. தனக்கு அனுசரணையாகவும், ஆதரவாகவும் இருக்கிறாள் என்பதற்காகக் கோமதியின் அமைதியையும் குலைக்க அவன் எண்ணுவான் என்று அவள் சந்தேகப்பட்டாள்.

எதாக இருந்தாலும் அவனைத் தான் ஒருத்தியாகவே எதிர்க்க வேண்டும்....! தான் ஒருத்தியாகவே அவனை ஒழிக்க வேண்டும். இதில் மற்றவர்களுடைய தலையீடோ, மற்றவர்கள் சம்பந்தப்பட்டிருக்கிறார்கள் என்கிற சந்தேகமோ யாருக்கும் வரக்கூடாது. அப்படி எதிர்த்து, அதனால் வரும் சாதக பாதகங்களைத்தான் ஒருத்தியே எதிர்கொள்ள வேண்டும்.

இதனால் தன்னைப் பற்றி மருத்துவ மனையில் யாரிடமும் சொல்லாமல் இருந்தாள்.

இப்பொழுது அம்பிகாவுக்குத் தெரிந்து விட்டது. அவளுக்குத் தெரிந்து விட்டபடியால் அடுத்து பரமேஸ்வரனுக்கும் தெரிந்திருக்கக் கூடும்!

மருத்துவ மனையின் வெளிப்புறத்தில் மர நிழலொன்றில் உட்கார்ந்திருந்தாள் சுமங்களா.

தன்னுடைய இக்கட்டான நிலையை எண்ணிப் பார்த்தாள்.

அவளைத் தண்டிக்க வேண்டும்.

''சுமங்களா!''

பின்னால் அழைப்பு கேட்டது.

அம்பிகா நின்று கொண்டிருந்தாள்.

அவள் முக மலர்ச்சியுடன் காணப்பட்டாள். அழகாக கடாய் ஒன்றை அணிந்திருந்தாள். ரிப்பன் முடி பின் தலையில் வெளியே தெரிந்தது.

'இவள் தன் முடியை மாற்றிக் கொண்டு விட்டாளா? அன்று போட்டோவை வாங்கி வைத்துக் கொண்டாளே! பரமேசுவரனைப் பார்த்து — நான், இவளிடம் சொன்னதையெல்லாம் — சொல்லியிருக்கிறாள். அவன் சூறாவளி போல் என்னைத் தாக்கி விட்டுப் போய் விட்டான். ஒருவேளை, இவள் மனத்தை இது உருத்தி இருக்க வேண்டும். அல்லது அவனே இவளிடம் சொல்லியிருப்பான். இவள் மனத்தை நான் கலைத்து விட்ட குற்றத்திற்காக என்னை ஆத்திரம் தீர அடித்துப் புரட்டி விட்டதைப் பெருமையுடன் கூறியிருப்பான்.'

''எப்படி இருக்கிறது உடம்பு?''—கேட்டுக் கொண்டே அவளருகில் வந்து உட்கார்ந்தாள், அம்பிகா.

''பரவாயில்லை!''

''திடீரென்று, அன்று இரவு ஒன்பது மணி இருக்கும். யாரோ டெலிபோனில் என்னைக் கூப்பிட்டார்கள். பேசுவது டாக்டர் என்று மட்டும் சொன்னார்கள். நான் பதற்ற மடைந்து போய் விட்டேன். 'பெண் யார் என்று தெரியவில்லை. அவங்க வானிடி பேக்கில் ... பணமும் இந்தப் போன் நெம்பரும் தான் இருந்தது. அன்கான்ஷியஸா இருக்

# இடையில் அணைந்த விளக்கு



சாங்க. என்ன விவரமென்று தெரியவில்லை. காரில் அடி பட்டிருப்பாங்களான்னும் தெரியவில்லை. ஆட்டோவிலே வந்து இறங்கினதா இங்கே இருப்பவர்கள் சொன்னார்கள்' அப்படீன்னு டாக்டர் போன்லே சொன்னார். வீட்டில் அப்பாவும் இல்லை. தம்பியை அழைத்துக் கொண்டு இங்கே வந்தால் நீ! நான் பயந்தே போய் விட்டேன். உனக்கெப்படி இந்தக் காயங்கள் ஏற்பட்டன? உன்னால் பேசக் கூட முடியவில்லையாம். மாடிப்படியிலே உருண்டு விழுந்து விட்டதாகச்சொன்னாயாம்.

''அந்த நிலையில் உன்னை அப்படியே விட்டு விட்டுப் போகவும் .... 'இவளை எனக்குத் தெரியாது' என்று சொல்லிவிட்டு ஒதுங்கவும் மனமில்லை. எனக்கும் உனக்கும் சம்பந்தம் இல்லைதான். ஏதோ அன்றொரு நாள் வந்தாய். பரமேஸ்வரனைப் பற்றிச் சொன்னாய். இதைத் தவிர அதற்குமுன் உன்னை நானோ ... என்னை நீயோ பார்த்தது கூடக் கிடையாது.''

சுமங்களா, நடைபாதையில் மெதுவாக நடக்க ஆரம்பித்தாள். அவளுடன் அம்பிகாவும் பேசிக் கொண்டே நடந்தாள்.

''எங்கே எப்படி விழுந்தே? உன் உடம்பில் இருந்த காயத்தைப் பார்த்தவுடன் எனக்கே துக்கம் தாங்கவில்லை.''

''நான் எந்த மாடிப்படியிலிருந்தும் விழவில்லை. உன்னிடம் உண்மையைச் சொன்னேன் என்பதற்காக என்னை அவர் அப்படி அடித்து விட்டுப் போய் விட்டார்.''

''உண்மையாகவா?''

''உண்மைதான்.''

''எதை நம்புவது.... எதை நம்பாமல் விடுவது என்றே புரியவில்லை!''

''யாரை நம்புவது என்பது உன் இஷ்டம். உன் முடிவு இதாகத்தான் இருக்க வேண்டுமென்று நான் நிர்ப்பந்திக்கமுடியாது. ஆனால் அவர் என்னைப் பற்றி உன்னிடம் என்ன கூறியிருப்பார் என்பதை அவருடைய குணத்திலிருந்தும் என்னாலும் யூகிக்க முடியும். நடத்தைக் கெட்டவள் என்று சொல்லியிருப்பார். அப்படிச் சொல்லியிருந்தால் அதற்காக நான் வருத்தப்படப் போவதில்லை. ஒன்றை மட்டும் உன்னிடம் மனம் திறந்து வெளியிடுகிறேன். அவரை நம்பாதே! அவரைப்போன்ற மிருகத்தை நான் இனி எங்குமே சந்திக்கக் கூடாது என்று பிரார்த்தனை செய்கிறேன். உனது உதவிகளுக்கு நன்றி. என் மேல்அன்பு வைத்து இந்த ஒரு வார காலமாக இரவு பகல் பாராது நீ என் அருகிலேயே இருந்து எல்லா உதவிகளையும் செய்தாயாம். என் சிகிச்சைக்கான பணத்தைக் கூட நீயே கொடுத்து விட்டாயாம்.''

''இதற்கு எதற்கு நன்றி! மனிதாபிமான அடிப்படையில்தான் செய்தேன். உன்னை நாளைக்கு டிஸ்சார்ஜ் செய்யப் போகிறார்களாம். டாக்டர் சொன்னார்.''

மெதுவாக நடந்து கொண்டிருந்த சுமங்களா அப்படியே நின்றாள், சில கணங்கள்.

'நாளைக்கே டிஸ்சார்ஜ் செய்தால் எங்கே போவது? அறைக்கே போய்விட வேண்டியது தானா? மீண்டும் அங்கே போனால் கோமதி கோபித்துக் கொள்வாளே? 'ஒருவாரமாக எங்கே போனே? எப்படி ஏன் ஆஸ்பத்திரிக்குப் போனே? எப்படி இந்தக் காயங்கள் ஏற்பட்டன?' என்று கேட்டால் அந்த வெட்கக் கேட்டை மீண்டும் ஒருமுறை விவரிக்க வேண்டியிருக்குமே!'

''என்னை மன்னித்து விடு. பரக என்னிடம் உன்னைப்பற்றிச் சொன்னவைகளை உன்னிடமே கேட்டுத் தெரிந்து கொள்ளலாமென்று எண்ணுகிறேன்.... உன்னை அவர் மணந்து கொண்டதை மறைக்கவில்லை. ஆனால், உன்னை வளர்த்து ஆளாக்கியவர்கள் செய்த நிர்ப்பந்தத்தினால் தான் அப்படிச் செய்தாராம். அதோடு அவரிடம் அவர்கள் பட்ட கடனுக்காக....'' — அவள் அதை முடிக்கும் முன்னால் சுமங்களா தொடர்ந்தாள்:

''மீதியை சொல்கிறேனே. என்னை அவருடன் பழக விட்டார்கள். இந்தப் பழக்கத்தில் அவர் தம் உசிதம் போல என்னை உபயோகப் படுத்திக் கொள்ளவும், அவர்கள் பட்ட கடனை நேர் செய்து கொள்ளவும் — அவருக்கு அனுமதி அளித்து விட்டார்கள்.... என்று கூறினாரா பரசு?...''

''ஆமாம்.....''

''அவர் அப்படி நினைத்திருக்கலாம்.. என்னை அவருடன் பழக அனுமதித்தவர்கள், பழகத் தூண்டியவர்கள் அப்படி எண்ணியிருந்திருக்கலாம். ஆனால், அவைகளை நான் அங்கீகரிக்க

## வம்பன் வெங்கு

செய்தி: ''ஏமாறாதீர்கள்'' - நாராயணசாமி நாயுடுவிற்கு கல்யாணசுந்தரம் யோசனை.

வெங்கு: 'எங்களைத் தவிர்த்துப் பிறரிடம்' என்பதை முதலில் சேர்த்து வாசிக்கவும்.

பிலுமோடி: இந்திரா ஆட்சி கவிழும்.

வெங்கு: கனவு பலிக்கு 'மோடி'?

செய்தி: ஆறு மாதங்களுக்கு மருத்துவக் கல்லூரிகளை மூட குஜராத் அரசு முடிவு.

வெங்கு: அதற்கு மேலும் மூட மாணவர்கள் முடிவு!

செய்தி: மாநில முதல்வர்கள் எப்போது வேண்டுமானாலும் வானொலியில் உரையாற்றலாம்.

வெங்கு: இந்திரா காங்கிரஸ் முதல்வர்கள் எனக் கூற மறந்தமைக்கு மன்னிக்கவும்.

செய்தி: நேதாஜியின் நாற்காலி டில்லிக்கு வருகிறது.

வெங்கு: இந்த நாற்காலியில் அமர எவரும் போட்டியிட மாட்டார்கள் என நம்புகிறேன்.

மத்திய அமைச்சர்: பத்திரிகை தணிக்கை சட்ட ரீதியானதே.

வெங்கு: சட்டம் ஆளுங் கட்சியின் ரீதியானதே.

- விருச்சிகராஜ்

வில்லே. ஆரம்பத்திலிருந்தே ஒரு சரியான கண்ணேட்டத்தோடு இருந்த நான் அந்த எண்ணத்துடன் பழகவில்லே. இப்பொழுது அதைப்பற்றி யெல்லாம் கூட நான் விவா திக்கத் தயாராக இல்லே அம்பிகா!... ஆனல் உன்னிடம் முன்கூட்டியே அவரைப் பற்றிச் சொல்லி எச்சரிக்க விரும்புகிறேன்.''

''வேண்டாம். நான் ஒரு முடிவுக்கு வந்து விட்டேன். உண்மையில் அவர் நல்லவர்.''

கமலங்களா, அதிர்ச்சியுடன் அம்பிகாவைப் பார்த்தாள்.

''அவரைக் கண்டிப்பாக மணந்து கொள் வேன். அதற்கு முன் தற்போது இருக்கிற தடை களே உடைத்துக்கொள்ள இசைந்திருக்கிருர்.''

''உனக்கு எனது ஆழ்ந்த அனுதாபங்கள்.'' கோபத்துடன் பார்த்தாள் அம்பிகா.

''அவரிடம் பணம் பறிக்க நீ திட்டமிடு கிருயோ எனச் சந்தேகமாக இருக்கிறது.. உனக்கு எவ்வளவு பணம் வேண்டும் சொல். நான் தருகிறேன். அவருடைய வாழ்க்கையில் குறுக்கிட்டு அவரை அமைதி இல்லாமல் செய் வதுடன் என் அமைதியையும் ஏன் கெடுக் கிருய்? உனக்கு என்ன வேண்டுமானுலும் கேள். நான் தருகிறேன்.''

''உன் தலையெழுத்தை மாற்ற எண்ணி னேன். ஆனல் அதை நீயே எழுதிக் கொள் கிறேன் என்கிருய். போய் வா. உன்னுடைய உதவியோ... அனுதாபமோ எதுவுமே தேவை யில்லே. நீ சாத்தானிடம் வேதம் கேட்டுக் கொண்டிருக்கிருய்.''

''அவர் சொன்னது சரிதான். அவரை விட்டு விட்டுக் காதலனுடன் ஓடிப் போனது மன்றி, மிரட்டிப் பணம் பறிக்க முயற்சி செய்கிருய்.''

''முன்பின் அறிமுகமில்லாத பெண் என்ப தால் உன்னுடைய இந்த அநாகரிகமான போக்கையும் மன்னிக்கிறேன். நீ போய்விடு. சேற்றில் போய் விழாதே என்கிறேன். அப் படித்தான் விழுவேன் என்ருல் விழு! அது பாதுகாப்பு இல்லாத தழல். அதன் பக்கம் போகாதே! என் இறக்கைகள் கருகினது போல் உன் இறக்கைகளும் கருகி விடும் என் கிறேன். அப்படித்தான் போவேனென்ருல் உன்னைத் தடுக்க நான் யார்? போ... போய் விழு! இறக்கைகளைக் கருக்கிக் கொண்டு விழுந்து மடி.''

''நடத்தை கெட்டவனுடைய எச்சரிக் கையை நான் ஏற்பதென்ருல்...என்னைப் போன்ற முட்டாள் யாருமில்லை என்றுதான் சொல்ல வேண்டும்'' — அம்பிகா உக்கிரத் துடன் சீறினள்.

''அம்பிகா!''

கமலங்களா கத்தினள். அவளுக்கு முன்னே யும் பின்னேயும் மெதுவாக நடை பயின்று கொண்டிருந்தவர்கள் அவளை ஒரு மாதிரி யாகப் பார்த்தார்கள்.

''இந்த வார்த்தைக்கு நீ தண்டனே அடைந்தே தீர வேண்டும். இன்று சொல்லி வைக்கிறேன். இதற்காக என்னிடம் நீ மன் னிப்புக் கேட்கிற காலம் வரும். உன்னை ரொம்பவும் நல்ல பெண் என்று எண்ணிக் கொண்டிருந்தேன். அந்தச் சாத்தானின் வேதத்தால் நீயும் எவ்வளவு கீழ்த்தரமான

''இங்கு பட்டதாரி காப்பி கிடைக் கும் என்று ஒரு ஹோட்டலில் போட்டிருந்தது. ஒருவன் சர்வ ரிடம் கேட்டான்: ''பட்டதாரி காப்பின்னு என்னங்க?...'' உடனே சர்வர் கூறினுன்: ''அதாங்க... டிகிரி காப்பி!''

- கை. இராமமதி



அசிங்கமானவளாகி விட்டாய் என்பதைப் புரிந்து கொண்டேன். இனி என்னைப் பார்க்க நீ வர வேண்டாம். உன்னை நான் சந்திக்கிற இடம் நீ கண்ணீரும் கம்பலையுமாக நிற்கிற இடமாகத்தான் இருக்கும்.''

அவளுடைய உள் மனத்து வேகம் .... சோகம் எல்லாம் சாபமாக வெளிப்பட்டுக் கொண்டிருந்தது.

''நீ அவரைக் காதலிக்கிருய் என்பதாலோ அல்லது அவரை விவாகம் செய்து கொள்ளப் போகிருய் என்பதாலோ, எனக்கு எவ்வித மனக்கிலேசங்களும் இல்லை, அம்பிகா! முதலில் இதைப் புரிந்து கொள். அவருடன் வாழ வேண்டுமென்ற ஆசை கிஞ்சித்தும் இல்லாத வள் நான். உன்னிடம் வந்து சொன்னேன்; கேட்டேன் என்ருல் அது உன்னிடம் மாங்கல் யப் பிச்சை கேட்பதற்காக அல்ல. அவர் தொட்டுத் தீண்டி விட்டார் என்பதற்காக மட்டுமே ... அவருடைய மனைவி என்கிற பாவனையாகிப் பின்பு ஒதுங்கியிருக்கிறேன்.''

'மனைவி என்கிற பாவனையாகி' என்று உணர்ச்சியின் உச்சிக்குச் சென்று விக்கி, விம் மித்துத் தன்னையறியாமல் அழுதாள் கமலங் களா. மனைவி என்கிற பாவனை கூடத் தன் மேல் அவன் காட்டாத சோக உணர்வு இதய ஆழத்திலிருந்து சொற்களைக் கரை யேற்றித் தவிக்க வைத்துக் கொண்டிருந் தது. சொற்களைத் தடை செய்து கொள்ள முடியாமல், மடை திறந்த வெள்ளம்போல் பொங்கி உணர்ச்சிகளைக் கொட்டலானுள்.

''அவருடன் சேர்ந்து வாழ நான் எவ்வித முயற்சியும் மேற்கொள்ளாததற்கும் இது தான் காரணம். மற்ற எல்லா வகையிலும் அவர் எனக்கு அந்நியமானவரே. எனது முதல் எதிரியே! இதை நினைவில் வைத் துக் கொள்! போ..., கண்களை மூடிக் கொண்டு விழுவேன் என்று சொல்கிற உன் னைப் போன்றவர்களை ஆண்டவன்தான் காப் பாற்ற வேண்டும். அன்று உன்னைப் பார்த்து விட்டு வந்த பிறகு உன் மேல் ஆழ்ந்த அனு தாபமிருந்தது. உனக்காகப் பிரார்த்தனை செய்யக் கூட நினைத்தேன். இனி அவ்வாறு செய்ய மாட்டேன். என்னை முன்பின் தெரியா மல் நடத்தை கெட்டவள் என்று சொல்லி நீயும் என் விரோதியாகி விட்டாய் போ... நீயும் உன் பணமும்....''

அவள் வேகமாக மருத்துவமனைக்குள் போய் விட்டாள்.

அம்பிகா அப்படியே ஸ்தம்பித்துப் போய் நடைபாதையில் நின்று விட்டாள். ஒரு சாதாரண ஏழை! யாருமற்ற அநாதைச் கமலங்களாவிஞல் தான் துச்சமெனத் தூக்கி யெறியப்பட்டு விட்டோமே என்கிற வெட்க உணர்வு அவளை அவமானத்துக் குள்ளாக் கியது. (தொடரும்)

# STF ஸ்ரீராம்
# டிரான்ஸ்போர்ட் பைனான்ஸ் கம்பெனி லிமிடெட்.

பதிவு பெற்ற அலுவலகம்: 123, அங்கப்ப நாயக்கன் தெரு,
சென்னை 600 001. போன்: 37890, 28545.
நிர்வாக அலுவலகம்: 145, லிங்கி செட்டி தெரு, சென்னை 600 001. போன்: 34699

## கீழ்க்கண்ட விதிகள், நிபந்தனைகள் பேரில்
# பிக்சட் டெபாசிட்டுகள்
## ஏற்கப்படும்.

| | வட்டி விகிதம் (ஒரு வருடத்திற்கு) | | |
|---|---|---|---|
| கால வரம்பு | மாதம் ஒரு முறை பெறுவதானால் | ஆறு மாதத்திற்கு ஒரு முறை பெறுவதானால் | கால வரம்பின் முடிவில் பெறுவதானால் |
| 1 வருடம் | 14% | 15% | 15.5% |
| 2 வருடம் | 14.5% | 16% | 17.5% |
| 3 வருடம் | 15% | 17% | 20% |

டெபாசிட்டுகள் குறைந்தபட்சமாக ரூ. 1000-ம் அதன் மடங்குகளும் ஏற்கப்படுகின்றன.
டெபாசிட்டுக்கான விரிவான நிபந்தனைகள் அடங்கிய விண்ணப்ப பாரங்களை
கம்பெனியின் பதிவு அலுவலகத்திலிருந்து அல்லது அதன் கிளை
அலுவலகங்களிலிருந்து பெற்றுக் கொள்ளலாம்.

பாங்குகள் அல்லாத பைனான்ஸ் கம்பெனிகளுக்கான ரிசர்வ் பாங்க் ஆப் இந்தியாவின்
கட்டளைகளுக்குட்பட்டு டெபாசிட்டுகள் ஏற்கப்படும்/புதுப்பிக்கப்படும்.

பாங்குகள் அல்லாத பைனான்ஸ் கம்பெனிகள் மற்றும் இதர பாங்குகள் அல்லாத கம்பெனிகள்
விஷயமான (விளம்பர) விதிகள் 1977-ன்படி கொடுக்கப்பட வேண்டிய விபரங்கள்
கீழே தரப்பட்டுள்ளன:

(அ) கம்பெனியின் பெயர் : ஸ்ரீராம் டிரான்ஸ்போர்ட் பைனான்ஸ் கம்பெனி லிமிடெட்.

(ஆ) கம்பெனி நிறுவப்பட்ட தேதி : 30-6-1979

(இ) கம்பெனியின் அலுவல்களும், கிளைகளும். : மோட்டார் வாகனங்கள் மற்றும் இயந்திரங்கள் தவணை முறையில் வாங்க கடன் கொடுப்பது (Hire Purchase)
கிளை:
பிரவுனம்மா டவர்,
70/1, மிஷன் ரோடு, பெங்களூர் 560 027
போன்: 27006

(ஈ) கம்பெனியின் நிர்வாகம் பற்றிய சுருக்கமான குறிப்புகள் : டைரக்டர்கள் குழுவின் மேற்பார்வை, கட்டுப்பாடு, ஆணைகள் ஆகியவற்றுக்கு அடங்கின நிர்வாக டைரக்டரால் கம்பெனி நிர்வகிக்கப் படுகிறது.

## (உ) டைரக்டர்களின் பெயர், முகவரி மற்றும் தொழில்:

| பெயர் | முகவரி | தொழில் |
|---|---|---|
| 1. ஜி. வி. ராமன் (தலைவர்) | ஜே. கௌரிகாந்தன் & கோ, 20, ராமச்சந்திர ஐயர் தெரு, தி.நகர், சென்னை 600 017. | சார்ட்டர்ட் அக்கவுண்டன்ட் |
| 2. வி. ஸ்ரீராம் | மெஸ்ஸர்ஸ். பாட்டர்சன் & கோ, 11/12, செகண்ட் லைன் பீச், சென்னை 600 001. | ஸ்டாக் ப்ரோக்கர் |
| 3. எஸ். ராமசுப்ரமணியம் | கிங் & பாட்ரிஜ், 'கத்தோலிக் சென்டர்' அரண்மனைக்காரத் தெரு, சென்னை 600 001. | அட்வகேட் |

| | | |
|---|---|---|
| 4. ஆர். நாகராஜன் | 4-A, தாங்கல் பாட்டை,<br>திருவான்மியூர், சென்னை 600 041. | கம்பெனி<br>எக்ஸிக்யூடிவ் |
| 5. ரவி சி. தல்வார் | 1, பிரைம் வீதி,<br>பெங்களூர் 560 025. | கம்பெனி<br>டைரக்டர் |
| 6. ஆர். தியாகராஜன் | 4-A, தாங்கல் பாட்டை,<br>திருவான்மியூர், சென்னை 600 041. | கம்பெனி<br>எக்ஸிக்யூடிவ் |
| 7. எல். எஸ். கோபாலன் | கமர்சியல் கூட்ஸ் டிரான்ஸ்போர்ட்ஸ்,<br>247, தம்பு செட்டி தெரு,<br>சென்னை 600 001 | வர்த்தகம் |
| 8. தி. ஜெயராமன் | ஆதமங்கலம்,<br>தஞ்சாவூர் மாவட்டம் | கம்பெனி<br>டைரக்டர் |
| 9. ஏ. வி. எஸ். ராஜா | 123, அங்கப்ப நாயக்கன் தெரு,<br>சென்னை 600 001 | கம்பெனி<br>டைரக்டர் |
| 10. ஜி. ராஜரெத்தினம்<br>(நிர்வாக டைரக்டர்) | 'சங்கராலயா'<br>22-A, மெலோனி ரோடு,<br>தி.நகர், சென்னை 600 017. | வர்த்தகம் |

(ஐ) இந்த விளம்பர தேதியிலிருந்து முந்தைய மூன்று ஆண்டுகளின் லாப விபரங்களும் (வரி ஒதுக்கீட்டுக்கு முன்னும் பின்னும்) மற்றும் அந்த ஆண்டுகளில் கம்பெனியால் வழங்கப்பட்ட டிவிடெண்டுகளும்:

| முடிவுற்ற ஆண்டு | லாபம் (வரி விதிப்புக்கு முன்) | லாபம் (வரி விதிப்புக்கு பின்) | வழங்கப்பட்ட டிவிடெண்டு |
|---|---|---|---|
| 30.9.80 | ரூ. 18,187.00 | ரூ. 5,187.00 | —<br>(முடிவுற்ற முதல் வியாபார ஆண்டு) |

(ஏ) தணிக்கையான கடைசி இரு பாலன்ஸ் ஷீட்டுகளில் கொடுக்கப்பட்டுள்ள சுருக்கமான நிதி நிலைமை:

கம்பெனி 30.6.1979-ல் தான் நிறுவப்பட்டதால் கீழே கொடுக்கப்பட்டுள்ள விவரங்கள் 30.9.1980-ல் உள்ள தணிக்கை செய்யப்பட்ட பாலன்ஸ் ஷீட்படியானவை.

| பொறுப்புகள் | 30.9.80 தேதியில் ரூ. லட்சத்தில் | ஆஸ்திகள் | 30.9.80 தேதியில் ரூ. லட்சத்தில் |
|---|---|---|---|
| பங்கு மூலதனம் | 5.00 | நிலையான ஆஸ்திகள் | 0.25 |
| ரிசர்வ்களும் உபரியும் | 0.05 | முதலீடுகள் | — |
| ஈடு பெற்ற கடன்கள் | 1.58 | நடப்பு ஆஸ்திகள், கடன்கள், மற்றும் அட்வான்ஸ்கள் | 16.13 |
| ஈடு பெறாத கடன்கள் | 6.08 | | |
| நடப்பு பொறுப்புகளும் ஒதுக்கீடுகளும். | 3.77 | இதர செலவினங்கள் | 0.10 |
| | 16.48 | | 16.48 |

குறிப்புகள்:

(1) ஆணைகளுக்குட்பட்டு டெபாசிட்டுகள் மூலம் கம்பெனி திரட்டக்கூடிய தொகை— ரூ. 49.50 லட்சம்.

(2) 24.12.1980 அன்று இருப்பில் இருந்த டெபாசிட்டுகளின் கூட்டுத் தொகை— ரூ. 7.27 லட்சம்.

(3) கம்பெனியில் தவணை கடந்த டெபாசிட்டுகள் எதுவும் இல்லை.

(4) இதன் மூலம் உறுதியளிப்பது என்னவெனில்,

(i) ரிசர்வ் பாங்க் ஆப் இந்தியாவின் ஆணைகளில் கடைப்பிடிக்க வேண்டிய பொருத்தமான ஷரத்துகளை கம்பெனி நிறைவேற்றியுள்ளது.

(ii) மேற்படி ஆணைகளைக் கம்பெனி நிறைவேற்றியிருப்பதால், டெபாசிட்டுகளைத் திருப்பித் தருவதற்கு ரிசர்வ் பாங்க் ஆப் இந்தியா உத்திரவாதம் அளிப்பதாகக் கொள்ளலாகாது.

(iii) கம்பெனி ஏற்றுக் கொண்ட டெபாசிட்டுகள் ஈடு பெறாதவை. இவை, ஏனைய ஈடு பெறாத கடன்களுக்குச் சமமாகக் கருதப்படும்.

இவ்விளம்பர வாசகம் டைரக்டர்கள் குழுவினால் 24.12.1980 அன்று தீர்மானமாக அங்கீகரிக்கப்பட்டு, அவர்களது அனுமதியின் பேரில், அவர்கள் பெயரால் வெளியிடப்படுகிறது. இவ்விளம்பரத்தின் நகல், பெரும்பான்மையான டைரக்டர்களால் கையொப்பமிடப்பட்டு பெங்களூரில் உள்ள ரிசர்வ் பாங்க் ஆப் இந்தியா, பாங்குகள் அல்லாத கம்பெனிகள் துறைக்கு பட்டுவாடா செய்யப்பட்டுள்ளது.

டைரக்டர்கள் குழு ஆணைப்படி,
ஸ்ரீராம் டிரான்ஸ்போர்ட் பைனான்ஸ்
கம்பெனி லிமிடெட்டுக்காக,

ஜி. ராஜரெத்தினம்
நிர்வாக டைரக்டர்

சென்னை
தேதி: டிசம்பர் 24,.1980.

ADWAVE/STF/1556

# அவளைத் தொடுவானேன்! அவஸ்தைப் படுவானேன்!!

**ஆர். சேகர்**

ஆரம்ப அடிதடியைத் தவிர்க்க அந்தப் படத்துக்கு அட்வான்ஸ் புக்கிங் செய்திருந்தான். ஏ படம். பெரிய ஏ. சந்தோஷ தினத்தைக் கொண்டாட. எனக்குக் கல்யாணம். பெண் வீட்டார் பத்தாயிரம் ரூபாய் வரதட்சிணை கொடுத்து என்னை அட்வான்ஸ் புக்கிங் செய்திருக்கிறார்கள். ஒரு மாதத்தில் கல்யாணம். ஒரு வாரமாய்ப் பார்ப்பதெல்லாம் ஏ படம். படிப்பதெல்லாம் ஏ புக்ஸ். பேசுவதெல்லாம் ஏ ஜோக்ஸ். நினைப்பதெல்லாம்.... நான் ஒரு ஏ.

டி வரிசையில் என் சீட் நம்பர் 15. எனக்குப் பக்கத்தில் இன்னும் யாரும் வரவில்லை. எவளாவது பக்கத்து சீட்டுக்கு வரமாட்டாளா என்று எதிர்பார்த்த மனம் கனவுக்குப் போனது. ஜோடி ஜோடியாய்ப் போனவர்கள் மனதைக் கஷ்டப்படுத்தினார்கள். அந்த அம்மாவும், அம்மா பெற்ற அழகிய பெண்ணும் என் அருகில் வர — இதயத் துடிப்பு அதிகரித்து — பக்கத்தில் வர — துடிப்பு இன்னும் அதிகரித்து — அவர்கள் என்னைக் கடந்து போய்க் கொண்டிருக்கையில் மனம் சோகமாய்த் துவண்டது. அந்தத் தியேட்டரின் ஏஸி என் மனதின் சூட்டைத் தணிக்க முடியாமல் தோற்றது.

ஏறத்தாழ நிரம்பிய தியேட்டரில் எனக்கு வலது பக்கம் இரண்டு சீட் மட்டும் இன்னும் காலியாக இருந்தது. அடுத்ததில் ஒரு வில்லன் மூஞ்சி. எங்கள் ரோவில் அந்த அறுபது வயது மனிதரும் சுமார் 25 வயதுப் பெண்ணும் நுழைந்ததும் திரும்பவும் நப்பாசையின் ஜனனம். அந்த ரோவில் வலது பக்க இரு சீட்கள் மட்டுமே காலி. அப்படின்னா அந்தப் பெண் என்னருகில் அல்லது வில்லன் மூஞ்சிக்கருகில்! கடவுளே அருள்புரி!

முதலில் வந்த பெரியவர் கொஞ்சம் தயக்கம் காட்டி என்னையும் வி. மூஞ்சியையும் பார்வையால் ஒரு தடவு தடவினார். பிறகு வி. மூஞ்சியிடம் உட்கார்ந்தார். அந்தப் பெண் என் அருகே உட்காரவும் என் மனத்தின் சைத்தான் விழித்துக் கொள்ளவும் சரியாக இருந்தது.

தைரியம் வராமல் வழக்க பயம் வென்றது. இரண்டு நிமிடம் தவித்து. பின்புறம் இல்லாத நண்பனைத் தேடி அவளைப் பார்த்தேன். கழுத்தில் தாலி. திக்கென்றது. மனைவி! அப்படின்னு அந்தக் கிழவன்? கணவனு இருக்காது. அப்பா — மகள்? ம்ஹூம் இருக்காது. தலை நிறைய மல்லிகைப் பூ மனதில் புகுந்து விளையாட்டுக் காண்பித்தது. கிழவனிடம் சிரித்துப் பேசினாள். சாய்ந்து பேசினாள். காதைத் நீட்டியதில் 'அத்தான்' கேட்டது. கணவன் மனைவிதான். இளம் மனைவி. கொடுத்து வைத்த கிழவன்.

இந்தச் சமயத்தில் பின் வரிசை பூராவும் ஒரு மாணவப் பட்டாளம் வந்ததும் தியேட்டரே கலகலப்பானது. அவர்கள் கண்ணில் இவர்கள் பட்டார்கள்.

''என்ன பொருத்தம் உமக்குள் இந்தப் பொருத்தம்'' ஒருவன் டி. எம். எஸ். ஆனான்.

''மாமன் ஒரு நாள் மல்லிகைப்பூ கொடுத்தா....ன்'' — ஒருவன் மலேசியா வாசுதேவனானான்.

''இந்த வயசிலே பேத்தியைப் போய்க் கட்டிக்கலாமா?'' ஒருவன் நண்பனிடம் சந்தேகிக்க,



''ஐம்பதிலும் ஆசை வரும் ஆ...சையிலும் வேகம் வரும்...'' – மற்றவன் சந்தேகத்தை நிவர்த்தித்தான்.

மற்றவர்கள் கண்காணிப்பில் தான் இருப்பதை உணர்ந்த அவன் பேசாமல் ஊமையானான்.

''இந்த வயசில் ஏ படம் பார்க்கணும்னு ஓர் ஆசை. ஆசை யாரை விட்டது?''

''மனுஷனுக்குத்தான் எவ்வளவு ஆசை! ரெண்டாந்தாரம் இந்த வயசில யார் இல்லேன்னு அழுதாங்க.''

மாணவர்கள் கூட்டமாகவந்த தைரியத்தில் பாட்டுப் பாடி, கமெண்ட் அடித்து அமர்க்களப்படுத்த சுற்றியிருந்தவர்கள் மனஸில் ரஸித்து மகிழ, அந்தக் கணவன் பேசாமல் இருந்தான்.

ஒரு வழியாய் ஆரம்பித்த படம் என் பரபரப்பை அதிகரித்தது. பக்கத்து சிட்காரி கைகளைக் கட்டிக் கொண்டிருந்தாள்.

நண்பர்கள் மனசில் வந்து ஆசைத் தீய்க்குத் தூபமிட்டார்கள். கணவனே கிழவன் தானே! எனவே என் கை பட்டால் அவள் மறுப்புத் தெரிவிக்க மாட்டாள்னுதான் தோன்றுகிறது.

என் கைகளைக் கைப்பிடியிலிருந்து காலி செய்து அவள் வைப்பதற்காகக் காத்திருந்தேன். அவளோ கணவனிடம் ஏதோ சந்தேகம் கேட்கச் சாய்ந்தாள். அவனும் சாய்ந்தான்.

''டேய் என்னடா படம் ஒரே போர்'' பின்புற மாணவர் பட்டாளம்.

''ஸ்கிரீன் ஏண்டா பாக்கறே. எதிர்ல பார் சென்ஸார் பண்ணாத சீன் நடக்குது!'' பின்புற இளைய தலைமுறை.

உடனே விலகிய மனைவி கைப்பிடியில் கை வைத்தாள். பின்புறப் பசங்களுக்கு நன்றி மனஸில் சொன்னேன். லேசாக ஒரு மில்லி மீட்டர் என் கை அவள் மேல் பட்டது. நோ ரெஸ்பான்ஸ். அந்த உணர்வே அரை மணி நேரம் தங்கியது.




சே! நமக்கு ஒத்து வராது. என்னிடம் மனைவியை அமர அனுமதித்த நம்பிக்கைக் கணவனுக்கு எப்படித் துரோகம் செய்வது?

மீண்டும் ஏறத்தாழ அரை மணி நேரம் மனஸுடன் போராடித் தைரியம் அடைந்து நாற்காலியின் கைப்பிடிமேலிருந்த அவள் கை மேல் என் கையை வைக்கப்போகையில் அவள் தன் கையை எடுத்துக் கொள்ளவும் இடைவேளை வரவும் சரியாக இருந்தது.

## துணுக்கு வேட்டை

இந்த இதழ்க் கல்கியில் இடம்பெறும் துணுக்குகளை நிஜமாகவே வேட்டையாடத்தான் வேண்டிவந்தது. முசிறியில் ஆயுள் இன்சூரன்ஸ் வளர்ச்சி அதிகாரியாகப் பணியாற்றும் திரு எஸ். கல்யாண சுந்தரம் ஒன்றரை மணிநேரம் சிரமப்பட்டுத் தேடியதில் தேறியவை மிகக் குறைவுதான். ''நிறையப்பேர் எழுதுகிறார்கள். நிறையவும் எழுதுகிறார்கள். ஆனால் தரமானதாகவும் ஒரிஜினலாகவும் எழுதுகிறவர்களைத் தேடித்தான் பார்க்க வேண்டும் போலிருக்கிறது'' என்கிற இவர் திருவாரூர்காரர். படித்தது காரைக்குடி அழகப்பாவில். கண்ணில் படுகிற பத்திரிகைகளை வாங்கிவிடுகிற பழக்கமுடைய இவர் அதற்காக ''வீட்டில்'' நிறைய வாங்கிக்கட்டிக்கொள்வது உண்டாம். கிரைம் கதைகளில் மிகுந்த ஆர்வமுடைய இவருக்கு, அந்த வகையில் சேஸ், ஹரால்ட்ராபின்ஸ் இர்விங் வாலஸ், எல்லோருமே அத்துபடி.

● -அமைப்பு: 'வெல்பால்'
போட்டோ:- வி. என். ஆர். பாபு



கணவன் எழுந்து போய் ஐஸ்கிரீம் வாங்கி வந்தான். எழுந்துபோய் பாப்கார்ன் வாங்கி வந்தான்.

''ஒல்டெல்லாம் கோல்டு
ஏம்மண்டை பால்டு
ஒடிவிளையாடு தாத்தா....''

''டேய் நமக்கு ஐஸ் இல்லையா?''

ரன்னிங் கமெண்டரி ஆரம்பித்தது.

படம் ஆரம்பித்தது. என் தைரியம் போய் மீண்டும் மனஸோடு போராடி பயம்ஜெயித்து, படத்தையும் கோட்டை விட்டு, ஒரு மணி நேர அவஸ்தைக்குப் பின் என்னை நானே உணர்ந்தபோது திரையில் வணக்கம் சொன்னார்கள்.

எழுந்து வெளியே போகையிலாவது அவன் மேல் இடிக்கணும் என்று 'மூன்றுந்தர' முடிவெடுத்து முயல்கையில், பின் வரிசையின் எதிர்கால இந்தியாவின் நம்பிக்கைகளில் ஒருவன் படை பலத்தால் அவளிடம் மெதுவான குரலில் ''ரேட் என்ன?'' என்றான்.

உடனே திரும்பிய அவள் முகம் சிவந்திருந்தது. அந்த மாணவர்களை எரிக்கும் கண்களால் பார்த்துக் கொண்டு, ''சீ! பொறுக்கிங்களா! கொஞ்சமாவது உங்களுக்கு வெட்கம் மானம் இருக்கா? கூட்டம் சேர்ந்தாகும்மாளம் போடறது. ஒருத்தனுக்காவது உண்மையான தைரியம் இருக்காடா கோழைகளா! இந்த ஆள் என்னை ரேட் பேசிக் கூட்டிட்டு வரலேடா. லைசென்ஸோடுதான் வந்திருக்கார். என் புருஷன்டா.

''இத்தனை வருஷமா வீட்ல குப்பை கொட்டினப்போ ஒவ்வொருத்தனும் வந்து பார்த்து, 5 ஆயிரம், 10 ஆயிரம்னு ரேட் பேசிட்டுப் போனீங்களே! ஒருத்தனுக்காவது என்னைச் சும்மா கல்யாணம் பண்ணிக்கிற 'தில்' இருந்ததா?'' என்று இரைந்தாள்.

''கல்யாணி பேசாம இரு. என்ன இது நீயும் அசிங்கமாப் பேசிக்கிட்டு... பேசாம வா போகலாம். சின்னப் பசங்க விட்டுத் தள்ளு.''

''நீங்க சும்மா இருங்க. இவுங்களா சின்னப் பசங்க... வீணங்க.... படிச்சிட்டதாலே இப்பவே தங்களுக்கு ஒரு விலை நிர்ணயிச்சு வச்சிருப்பாங்க. டேய், எத்தனையோ கனுக் கண்டு அவை நிறைவேறாத ஏமாற்றத்துக்குள்ளாகி விரக்தியில் சாகப் போன என்னைக் காப்பாத்திக் கல்யாணம் பண்ணி ஒரு பாதுகாப்புத் தந்தவர்டா இவரு. எனக்கும் வாழ்வு கொடுத்த தெய்வம்டா இவர். உங்கல்ல எத்தனை பேருக்கு அந்தத் தைரியம் இருந்தது..? பின்ன என்னடா கேலி வேண்டியிருக்கு. இந்த உலகத்திலே இருக்கிற 20, 25 வயசுப் பசங்களையெல்லாம் நான் வெறுக்கிறேன். நாக்கில் நரம்பில்லாத விடலைப் பசங்கள். எனக்குச் சக்தி இருந்தா உங்க வயசுக்காரங்களை யெல்லாம் பொசுக்கிடுவேன். முதுகெலும்பைக் கழட்டி வெச்ச ஜென்மங்களா!....''

அவனவன் பேச்சு வராமல் சிலையாகப் பிரமித்து நின்றார்கள்.

அவள் பொரிந்து தள்ளிவிட்டு விடுவிடு என்று கணவனை இழுத்துக் கொண்டு சென்றாள். அவள் வார்த்தைகள் சாட்டையாய் என் மனஸில் அறைந்தன. திடீரென்று எனக்குள் நாக்கே இல்லாத மாதிரி ஓர் உணர்வு ஏற்பட்டது.

# வினை விதைத்தவன் வினை அறுப்பான்

திருமுருக கிருபானந்தவாரியார்



**''வினை விதைத்தவன் வினை அறுப்பான் தினை விதைத்தவன் தினை அறுப்பான்''**

என்பது சான்றோர் வாக்கு. செல்லமய்யர் என்பவர் பல்லவபுரத்து நல்லவராக வாழ்ந்து கொண்டிருந்தார். இவர் வேதங்களை ஓதி இறைவனுடைய பாதங்களைப் பரவி வழிபடுபவர்.

இவருடைய தந்தையார் பரம சாது. வேத வித்தாகிய அவருடைய ஆன்மா பிரியும் பொழுது செல்லம் ஐயர் தந்தையை வந்தனை செய்து ''அடியேனுக்கு என்ன அறவுரை?'' என்று கேட்டார்.

தந்தையார் அடியிற் கண்ட நான்கு நீதி மொழிகளை நான்கு மகா வாக்கியம் போல் எழுதிக் கொடுத்து சிவபதம் அடைந்தார்.

(1) வினை விதைத்தவன் வினையறுப்பான்.
தினை விதைத்தவன் தினையறுப்பான்
(2) காலையில் அரச சேவை செய்
(3) கண்ணால் கண்டதைச் சொல்லாதே.
(4) காலை போசனம் தள்ளாதே

இந்த வாக்கியங்களை செல்லம் ஐயர் வேத வாக்காக எண்ணி அவற்றைப் பொன்னே போல் போற்றி, அந்த ஏட்டைப் பூசையில் வைத்துக் கொண்டார். அவற்றைத் தினந்தோறும் பாராயணம் செய்வார்.

காலையில் எழுந்தவுடன் நீராடி, நீறாடி, காயத்ரி மந்திரம் ஜபம் செய்வார். 'அரச சேவை செய்' என்ற தந்தையின் கட்டளையாகிய மந்திரத்தைக் கடைப்பிடித்து ஓர் எலுமிச்சம் பழம் வாங்கிக் கொண்டு போய்ப் பல்லவபுரத்தை ஆளுகின்ற பார்த்திபனிடம் கொடுத்து 'பல்லாண்டு வாழ்க' என்று வாழ்த்தி 'வினை விதைத்தவன் வினை அறுப்பான்; தினை விதைத்தவன் தினை அறுப்பான்' என்று கூறி மன்னவனிடம் விடை பெற்றுக் கொண்டு திரும்புவார். இவ்வாறு பன்னிரண்டு ஆண்டுகள் செய்தார்.

மன்னவன் செல்லம் ஐயரிடம் மிக்க அன்பும், மரியாதையும் வைத்திருந்தான். இந்த ஐயர் நம்மிடம் பன்னிரண்டு ஆண்டுகளாக நாள்தோறும் வந்து வாழ்த்துரை கூறுகின்றார். பொங்கல் இனாம், தீபாவளி இனாம் என்று கேட்டு ஒரு பொருளையும் யாசிக்கின்றார் இல்லை. ஆசை ஒருசிறிதும் இல்லாத அந்த அந்தணர் செந்தண்மை பூண்டவர் என்று கருதி மறையவரிடம் நன்மதிப்பு வைத்திருந்தார்.

ஒரு நாள் அந்தணர் சிறிது கால தாமதமாக அரண்மனைக்குச் சென்றார். எப்போதும் காலை ஏழு மணிக்குப் போவது வழக்கம். அன்று ஏழரை மணிக்குப் போனார். மன்னவர் பூசை அறையில் வழிபாடு செய்து கொண்டிருந்தார். செல்லம் ஐயர் பூசை அறையில் சென்று எலுமிச்சம் பழத்தைத் தந்து பல்லாண்டு வாழ்க என்று கூறி,

வினை விதைத்தவன் வினையறுப்பான்
தினை விதைத்தவன் தினையறுப்பான்

என்று கூறினார்.

பெரியவர்கள், அல்லது அதிகாரிகளைக் காணும்பொழுது எலுமிச்சம் பழம் கொடுப்பார்கள். அதற்கு என்ன காரணம்? எல்லாப் பழங்களும் பழுக்க வேண்டிய காலம் என்று ஒன்று உண்டு.

''உருவத்தால் நீண்ட உயர் மரங்களெனும் பருவத்தாலன்றிப் பழா''

என்ற பாடலால் அறிக. எலுமிச்சம் பழம் எப்பொழுதும் பழுக்கக் கூடியது. அதனால் எலுமிச்சம் பழம் சதா பலம் என்று பெயர் பெறும்.

மன்னவன் பூசையில் வடிவாளை வைத்துப் பூசிப்பான். அந்த வாளாயுதம் படுக்கை அறையில் தலையணையின் கீழே நின்றுவிட்டது. வந்த அந்தணரைப் பார்த்து ''ஐயரே! என்னுடைய வடிவாள் படுக்கை அறையில் தலையணையின் கீழ் இருக்கின்றது. தயவு செய்து அதனை எடுத்து வாருங்கள்'' என்றார்.

செல்லம் ஐயர் மன்னவனுடைய படுக்கை அறைக்குச் சென்றார். படுக்கையின் மீது கண்ட விபரீதத்தை எண்ணித் திடுக்கிட்டார். கண்களை மூடிக் கொண்டார். ''சிவ சிவ'' என்று அவர் வாய் முணுமுணுத்தது.

''கண்ணால் கண்டதைச் சொல்லாதே'' என்ற தந்தையின் வாக்கியத்தைஎண்ணினார்.

''வினை விதைத்தவன் வினை அறுப்பான் தினை விதைத்தவன் தினையறுப்பான்'' என்று கூறிக்கொண்டே வடிவாளைஎடுத்துக்கொண்டு போய் மன்னவனிடம் கொடுத்து விட்டுத் தம் இருப்பிடத்தை அடைந்தார்.

படுக்கையில் படுத்திருந்த மகாராணியும், மந்திரியும் உள்ளமும் உடலும் நடுங்கினார்கள். தங்களுடைய கூடா ஒழுக்கத்தை ''ஐயர் பார்த்து விட்டாரே! அரசனிடம் சொன்னால் பெரிய ஆபத்து வருமே இதற்கு என்ன செய்வது?'' என்று எண்ணிப் பெரிதும் அச்சமடைந்தார்கள். மகாராணி மந்திரியைப் பார்த்து ''நீ பயப்பட வேண்டாம்.

நான் இதனைச் சமாளித்துக் கொள்வேன்'' என்றான்.

அரசன் தினந்தோறும் காலை ஏழரை முதல் ஒன்பது மணி வரை வழிபாடு செய்வான். அந்த நேரத்தில் அரசியும் அமைச்சனும் ஒன்று கூடி மகிழ்வார்கள். மந்திரி நடுங்கிய மனத்தினனாய்த் தன் இருப்பிடம் சென்றான்.

மகாராணி கூந்தலை அவிழ்த்துக்கொண்டு கண்ணீர் சொரிந்து கொண்டு மன்னவனிடம் சென்று, ''என் தெய்வமே! தாங்கள் எங்கே இருக்கிறீர்கள்! என் உயிர் துடிக்கின்றது. இனி நான் ஒரு கணமும் உயிருடன் இருக்க மாட்டேன். ஆ! ஆ! தலை சுற்றுகின்றதே! மண்ணும் விண்ணும் சுழலுகின்றனவே!'' என்று கூறிப் பாசாங்கு செய்தாள்.

மன்னவன் துணுக்குற்று, ''என் மாணிக்கமே! மாதர் திலகமே! வனிதா ரத்தினமே! உன் உடம்புக்கு என்ன நேர்ந்தது? மருத்துவரை அழைக்கட்டுமா?'' என்று கேட்டான்.

மகாராணி, ''என் தெய்வமே! நடந்ததை என் நாவினால் எப்படி நவில்வேன்! இந்த அவல சம்பவம் வெளியே தெரிந்தால் மானம் போகுமே! வாள் எடுக்க வந்த ஐயன் என் கையைத் தொட்டு இழுத்தான். நான் தலைவலியினால் சிறிது மயக்கமாகப் படுத்திருந்தேன். அந்நியன் தொட்ட மெய்யுடன் இனி நான் வாழ மாட்டேன். தங்கள் இருவடிக்குப் பல கோடி வணக்கங்கள். பெண்களுக்குக் கற்புதான் முக்கியம்'' என்று கூறி அழுது அரசனைத் தொழுதாள். அவள் கால் நிலத்தில் தோயாமல் நெருப்பை மிதித்தவள் போல் துள்ளித் துடித்தாள்.

அரசன், ''பெண் மாணிக்கமே! கற்புக்கரசியே! நீ கண் கலங்காதே. நீ கண் கலங்கினால் என் உள்ளம் கலங்கும். நான் அந்த ஐயனைப் படுக்கை அறைக்கு அனுப்பியது பிழை. இச் செய்தி அக்கம் பக்கம் தெரிந்தால் தீராப் பழி உண்டாகும். நான் அந்த ஐயனைத் தண்டிப்பேன்'' என்றான்.

மகாராணி, ''என் கண் கண்ட கடவுளே! அந்தப் பாவி தொட்ட என் கையை வெட்டி எறியுங்கள். அவன் தொட்ட கையுடன் வாழ மாட்டேன்'' என்று கூறி விம்மி விம்மி அழுதாள்.

இவர்: காசு இல்லாம ஓட்டலில் சாப்பிட்டுவிட்டு அவர் வெளியே போய்கிட்டு இருக்கார்! முதலாளி பேசாம உட்கார்ந்துகிட்டு இருக்காரே!

அவர்: அவர் நடிகராச்சே! அவருக்குப் பதிலா அவருடைய 'டூப்' உள்ளே மாவு ஆட்டிகிட்டு இருக்கார்!

- கடலூர் கன்னியப்பன்



மன்னவன், ''மாசில்லாத மணி விளக்கே! நீ வருந்தாதே. உன்னுடைய கற்பு நெறியைக் கண்டு நான் களிக்கின்றேன்'' என்றான்.

ராணி, ''என் அன்பே! அபிஷேக நீரை என்மேல் தெளியுங்கள். ஐயன் தொட்ட பாவம் விலகும்'' என்றாள்.

அரசன் அபிஷேக நீரை அவள் மீது தெளித்து அவளைச் சமாதானப்படுத்தினான்.

பன்னிரண்டு ஆண்டுகளாக நாள் தவறாமல் நம்மைக் கண்டு வாழ்த்திய அந்தணன் இந்த மாபெரும் தவறைச் செய்வானானால் உலகத்தில் யாரை நம்புவது? இதனை விசாரித்துத் தண்டிக்கவும் முடியாது. விசாரணை செய்தால் அவமானம் விளையுமே! நம்முடைய மனைவியின் தூய்மை கங்கா நதியைப் போன்றது. இவள் எனக்கு மனைவியாக வருவதற்கு நான் என்ன தவம் செய்தேனோ! என்றெல்லாம் எண்ணினான்.

அரசனுக்குப் பூசையிலும், உணவிலும், மற்ற அரசாங்க வேலைகளிலும் மனம் செல்லவில்லை. ஆழ்ந்த சிந்தனையுடன் பேயறைந்தாற்போல் அமர்ந்திருந்தான். இரவு ஒன்பது மணிக்கு ஒரு முடிவுக்கு வந்தான். அந்தப் பிராமணனை இரகசியமாகக் கொன்று தீர்த்துவிட வேண்டும் என்று எண்ணித் துணிந்தான்.

அரசன் இரவு ஒன்பது மணி அளவில் கரிய உடம்பும், பெரிய தோளும் உடைய இரக்கமில்லாத அரக்கர்களைப் போன்ற இரண்டு கொலைஞர்களை அழைத்து, கையில் ஆயிரம் ரூபாய் தனித் தனியாகக் கொடுத்தான். ''கொலைஞர்களே! நமது நகரத்தின் வடமேற்குத் திசையில் உள்ள பத்திரகாளி கோயிலின் மடப்பள்ளியில் பெரிய இருப்புக் கொப்பரையை வைத்து நாலு டின் நல்லெண்ணெயை விட்டுத் தீமூட்டி விடிய விடிய எரிய விடுங்கள். நாளை காலை சுமார் ஏழு மணியளவில்ஒருவன் வந்து''வேலை ஆயிற்றா?'' என்று கேட்பான். அவனைப் பிடித்துக் கொதிக்கின்ற எண்ணெயில் போட்டு அப்பளம் போல் பொரித்து விடுங்கள்'' என்று கட்டளையிட்டு அனுப்பினான். கொலையாளிகள் அரண்மனையிலிருந்து நாலு டின் எண்ணெயை வாங்கிக் கொண்டு போய்க் காளி கோயிலில் எண்ணெயைக் கொதிக்க வைத்து ஆயிரம் ரூபாய் கிடைத்த மகிழ்ச்சியினால் தெம்மாங்கு பாடிக் கொண்டிருந்தார்கள். இரவு பத்து மணிக்கு அரசனும் தேவியும் பள்ளி அறையில் பஞ்ச சயனத்தில் படுத்தார்கள்.

''அந்த ஐயனைக் கொல்வதற்கு என்ன ஏற்பாடு செய்தீர்கள்?'' என்று ராணி கேட்டாள்.'' நாளைகாலை ஏழு மணிக்கு நகரத்துக்கு மேற்கேயுள்ள பத்திரகாளி கோயிலில் பரம ரகசியமாகக் கொல்வதற்கு ஏற்பாடுகள் செய்திருக்கிறேன். இது வெளியே தெரியக் கூடாது'' என்று அவன் காதில் கூறினான் மன்னன். மன்னவன் உறங்கி விட்டான்.

இரவு பன்னிரண்டு மணி. ஜன்னலில் ஒரு நிழல் தெரிந்தது. ராணி மெல்ல எழுந்து போய் அமைச்சரைப் பார்த்து ''நாளை காலை ஏழு மணிக்குப் பத்திரகாளி கோயிலில் ஐயனைக் கொல்ல ஏற்பாடாகி யிருக்கிறது. நீ

பயப்பட வேண்டாம். நீ வழக்கம்போல் ஏழரை மணிக்கு வா'' என்று சொன்னான்.

மறு நாள் காலை ஐயர் வந்து அரசரிடம் எலுமிச்சம் பழத்தைக் கொடுத்து

''வினை விதைத்தவன் வினையறுப்பான்
தினை விதைத்தவன் தினையறுப்பான்''

என்று கூறிப் பல்லாண்டு வாழ்க என்று வாழ்த்தினார்.

மன்னர், ''அன்புக்குரிய அந்தணரே! நம் நகருக்கு மேற் திசையில்உள்ளபத்திரகாளி கோயிலில் ஒரு காரியம் நிகழக் கட்டளை யிட்டிருக்கிறேன். அந்த வேலை ஆயிற்றா? என்று கேட்டு வாருங்கள்'' என்று கூறினான்.

ஐயர் காளி கோயிலை நோக்கிப் புறப் பட்டார். அன்று துவாதசி. வழியில் ஒரு பிராமணர் ஏகாதசி விரதம் இருந்தவர் துவா தசிக்குப் பாரணம் செய்ய இவரை அன் புடன் அழைத்தார்.

''காலை போஜனம் தள்ளாதே'' என்ற தந்தையாரின் கட்டளைப்படி செல்லம் ஐயர் உணவருந்தச் சென்றார்.

மந்திரி வேகமாகப் பத்திரகாளி கோயி லுக்குப் போய் ''வேலை ஆயிற்றா?'' என்று கேட்டான். அவனை லபக்கென்று பிடித்து எண்ணெய்க் கொப்பரையில் இட்டுப் பொரித்து விட்டார்கள். பின்னர் காலை எட்டு மணி அளவில் அந்தணர் காளி கோயிலுக்குப் போய் ''வேலை ஆயிற்றா?'' என்று கேட்டார். கொலைஞர்கள் ''ஐயரே அப்பொழுதே ஆகிவிட்டது'' என்று கூறி னார்கள். ஐயர் எண்ணெய்க் கொப்பரையில் மந்திரி அப்பளப் பூவாய்ப் பொரிந்திருப் பதைக் கண்டு திடுக்கிட்டார். நேற்று இந்த நேரத்தில் இந்த மந்திரியைப் பள்ளியறையில் பார்த்தேன். இப்பொழுது எண்ணெய்க் கொப்பரையில் பார்க்கிறேன். ''வினை விதைத் தவன் வினையறுப்பான். தினை விதைத்தவன் தினையறுப்பான்'' என்று கூறிக் கொண்டு அரசனிடம் போய் ''வேலை முடிந்துவிட்ட தாம்'' என்று கூறினார்.

ஐயரைக் கண்டு அரசன் திடுக்கிட்டான். இவரைக் கொல்லத்தானே ஏற்பாடு செய் திருந்தோம்! அங்கே என்ன நடந்தது? என்று எண்ணிக் கொலைஞர்களைக் கூப்பிட்டு விசா ரித்தான். நடந்ததை அவர்கள் கூறக் கேட் டான். இரவு 9 மணிக்குத்தானே இந்த உத்தரவைப் பிறப்பித்தோம். எங்கோ இருக் கிற மந்திரிக்கு இது எப்படித் தெரிந்தது?

''ஐயரே! நேற்று வாள் எடுக்கச் சென் றீரே! அங்கு என்ன நிகழ்ந்தது?'' என்று கேட்டான்.

''கண்ணால் கண்டதைச் சொல்லாதே'' என்ற தந்தையின் கட்டளைப்படி அவர் சொல்ல மறுத்து விட்டார்! நடந்ததை ஊகத்தால் உணர்ந்த அரசன் ராணியையும் எண்ணெய்க் கொப்பரையில் பொரித்து விட்டு அந்தணரை அமைச்சர் பதவியில் வைத்து அரசு புரிந்தான்.

---

ஹிந்தி தீவார், வார் இழந்து தீயாய் வந்திருக்கிறது. பிரேமுக்குப் பிரேம் ஈயடிச்சான் காப்பி.
பாலாஜி இலங்கை ஒத்துழைப்புடன் தீப்பற்றியிருக்கிறார். விட்டு விட்டு எரியும் தீ. கதை?
ஹிந்தியிலிருந்து வந்த படம் என்று சொன்ன பிறகும் கதை என்ன என்று
கேட்டால் உங்களுக்கு சினிமா அறிவு பூஜ்ஜியம்தான்.
கொலை—பாசம்—பழி—காதல்—தியாகம்—எல்லாம் சேர்ந்த அவியல்.
சில காட்சிகளை மிகவும் பிரமாண்டமாகவே எடுத்துள்ளதைப் பாராட்ட
வேண்டும். பெரிய அரங்குகளை, இலங்கை எழிலை, துறைமுகத்தை, அழகாய்க்
கபளீகரம் செய்திருக்கும் கேமரா என். பாலகிருஷ்ணனுடையது.
அடையாளம் தெரியாமல் மெலிந்திருக்கும் ஸ்ரீப்ரியா (நடிப்பிலும்). சிம்பிளாய் சிலோன்
ஷோபா. குணச்சித்திர தேங்காய் 'பாய்'. பரத நாட்டிய போஸ் போல கராட்டே
போஸ் தரும் சாமர்த்தியம் ரஜனிக்குத்தான் வரும். வருகிறது. கதவைப்
பூட்டிவிட்டு அடித்து உதைத்து அடியும் வாங்கி — பாராட்டு ஹிந்திக்கே
போகிறது.
சின்ன வயசு ரஜனியாய் நடிக்கும் பையன் பார்க்கும் பார்வை. கைகள் இயங்கும் வேகம்
அப்படியே ரஜனி ஸ்டைல். ஆமாம் மிஸ்டர் இன்ஸ்பெக்டர்! (சுமன்)
திருடி ஓடும் பொடிப் பையனைத் துரத்திப் பிடிக்க முடியாமல் துப்பாக்கியால்
சுடுவதில் என்ன சாமர்த்தியம்?
ஒவ்வொரு காட்சியும் தீவாரை நினைவு படுத்துவதால்
டைரக்டர் கிருஷ்ணமூர்த்திக்கு மார்க் மைனஸாகிறது. பாலாஜி பிழைக்கத்
தெரிந்த தயாரிப்பாளர்தான்.

—நளினி சாஸ்திரி






அண்டை மாநிலமான கர்நாடகம் விழாக் கோலம் பூணுகிறது. போன மாதம் தமிழ் மாநாட்டுக்காகத் தமிழகம் செல விட்ட தொகையில் பாதி அளவேனும்—ஐந்து கோடி ரூபாய் - இந்த விழாவில் செல விடப்படவிருக்கிறது. விழா நடக்கும் இடமோ 5000 மக்கள் தொகைக்கும் குறைவாகவே உடைய சின்னஞ் சிறிய நகரம். சிரவண பெலகோலா... இந்த ஊர் இரண்டா யிரம் ஆண்டுகள் பழைமையானது. புகழ் மிக்க மௌரியப் பேரரசன் சந்திரகுப்தன் அரசைத் துறந்து தன்னுடைய மதிப்புக் குரிய ஜைன ஞானி பாத்ரபாகுவுடன் இங்கு தான் மௌன நடை போட்டான். இவ் விடத்தில் உலகிலேயே பிரும்மாண்டமான ஒற்றைக் கல் சிலை என்று சொல்லப்படுகிற கோமதேசுவரரின் சிலை எழுப்பப்பட்டு ஆயிரம் ஆண்டுகள் ஆகின்றன. கி. பி. 981 ஆம் ஆண்டில் வடித்து முடிக்கப்பட்ட இந்தச் சிலை ஐந்நூறு சிற்பிகளின் உழைப்பில் உரு வானது. பதினாறு கிலோ மீட்டர் சுற்று வட்டாரத்தில் எங்கிருந்து பார்த்தாலும் தெரி யும்படியான தனித்து நிற்கும் உருவ அமைப்பு இதுபோல உலகிலேயே எங்கும் இல்லை என் கிறார்கள்.

இந்தச் சிலையின் மிகச் சரியான உயரம் 58.5 அடி என்று அண்மையில் கணக்கிட் டிருக்கிறார்கள். அரிஷ்டநேமி என்னும் புகழ் பெற்ற சிற்பியிடம் இந்தச் சிலை அமைப்புப்





அண்ணனையா கொல்லப் போகிறேன்'' என் கிற சிந்தனை மின்னியது. மகாயோகம் பிறந்தது.

தன்னை அடிமைப்படுத்தி யிருந்த அதிகார போதையையும் செல்வச் செருக்கையும் விட்டொழித்தான் பாகுபலி. உயர்த்திய முஷ்டிக்கு இரையாகத் தன்னுடைய தலை மயிரையே கொடுத்துப் பிய்த்துப் போட் டான்.

நின்ற நிலையில் அனைத்தையும் துறந்த பாகுபலியைச் சுற்றிக் கரையான் புற் றெடுத்தது. மாதவிக் கொடி சுற்றிப் படர்ந் தது.

இன்றைக்கும் ஜைனத் துறவிகள் மயிர்

முறை என்றாலும் நாளடைவில் பழகி விடுகிறது.

கோமதீசுவரர் என்கிற பாகுபலி சிலையின் கால் கட்டை விரலின் நீளம் மட்டும் இரண் டரை அடி. பாதம் ஆறு அடி. இடடுக் கையின் ஆள்காட்டி விரல் மட்டும் பின்னமாகியுள்ளது. திருஷ்டிகழிப்புக்காகப் பின்னப்படுத்தப்பட் டது என்கிறார்கள்.

கி. மு. 3ம் நூற்றாண்டில் ஜைன ஞானி யான பாத்ரபாகு என்பவர் தன்னுடைய 12000 சீடர்களுடன் இந்தச் சிரவண பெல கோலாவுக்கு வந்தார். அவர்களுள் ஒரு வர்ன சந்திரகுப்த மௌரியன். இதே பூமியில்தான் சந்திரகுப்தனும் பாத்ரபாகு வும் உண்ணா நோன்பிருந்து உயிர் துறந் தார்கள்.

கோமதீசுவரர் சிலை அமைந்துள்ள இந்திர கிரி மலையின் மீது வெறும் கால்களுடன்தான் ஏறவேண்டும். 600க்கு மேற்பட்ட படிகளில் பாதங்கள் புண்பட்டாலும் வெப்பத்தால் வேதனையுற்றாலும் வேறு வழியே இல்லை. கோவிலின் வெளிக் கதவும் ஒற்றைக் கரும் கல்லில் வடிக்கப்பட்டது.

ரசமல்லனின் அமைச்சனான சாமுண்டா ராயனுக்கு 'கோமதன்' என்கிற பெயரும் உண்டு. அவன் வழிபட்ட கடவுள் என்ப தால் பாகுபலியின் சிலை கோமத ஈசுவரன் ஆயிற்று.

மாதவிக் கொடி சுற்றித் தோள் வரை படர்ந்துள்ள அழகு சுற்றிலும் எழுந்துள்ள கறையான் புற்றின் அமைப்பு, என்று அற்புதமான வடிவம் கொண்ட இந்தச் சிலை இப்போது ஆபத்தையும் எதிர்நோக்கியுள் ளது. பக்கத்தில் உள்ள சுரங்கங்களில் வெடி வைத்துத் தகர்ப்பதன் விளைவாக, பாகுபலி சுவாமி சிலையின் வலப்புறத் தொடையில் விரிசல் கண்டிருக்கிறது. எனினும், ஆழமான விரிசல் இல்லை. கெமிகல் ட்ரீட்மெண்ட் டால் சரிசெய்து விடலாம் என்கிறார்கள்.

இந்தப் பாகுபலி சிலை நிறுவப்பட்டு ஆயிரம் ஆண்டுகள், பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை நடைபெறும் மஸ்தகாபிஷேகம்-இன்றும் சேர்த்து இந்த மாதம் 22ந் தேதி

# கோமதேசுவரருக்கு ஆயிரம் ஆண்டுகள்

சுப்ர. பாலன்



1008 கலசங்களில், 70 அடி உயரச் சாரங்களில் ஏறிக்கொண்டு துறவிகள் அபிஷேகம் செய்யப் போகிறார்கள். புனித நீர், பால், நெய், தயிர், பொன், வெள்ளி நாணயங்கள், மலர்கள், குங்குமம், சந்தனம் — என்று சொரியப் போகிறார்கள். கற்பனை செய்து பார்க்கவே மிகவும் ஆனந்தமாக இருக்கிறது.

பதினைந்து லட்சம் பேர் பார்வையிடக் கூடும் என்று மதிப்பிடுகிறார்கள். மலை மீது செல்ல வசதி வேண்டும். அபிஷேகக் கலசங்கள் ஏலம் விடப்படுகின்றன. 52 லட்ச ரூபாய் வருமானம் இதிலேயே கிடைக்குமாம். இந்தத் தொகை அறப் பணிகளுக்குப் பயன்படப் போகிறது. பெரும் அளவில் வட இந்திய யாத்திரிகர்கள் வரக் கூடும் என்று எதிர்பார்க்கிறார்கள்.

பாரதப் பிரதமர் இந்திரா காந்தியும் இந்த விழாவுக்கு வருகை தருகிறார். ஆயிரம் ஆண்டுகளின் பெருமை சொல்கிற விழா. மானசிகமாகவேனும் நாமும் சேர்ந்து கொள்கிறோம்.

பணியை ஒப்படைத்த சாமுண்டராயன் என்னும் ஜைன அமைச்சர் பணச் செலவை ஒரு பொருட்டாகவே மதிக்கவில்லை. கங்க மன்னன் நான்காம் ரசமல்லனிடம் அவன் அமைச்சனாகப் பணியாற்றிய காலத்தில் பத்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தொடங்கப்பட்ட இந்தச் சிலை வடிக்கப்படும்போது விழுந்த ஒவ்வொரு தூளுக்கும் எடைக்கு எடை பொன் கேட்டார் அரிஷ்டநேமி என்று ஒரு கதை உண்டு.

இந்தச் சிலை யாருடையது? ஜைன தீர்த்தங்கரர்கள் எனப்படும் இருபத்து நால்வரில் இவர் ஒருவரா? ஆதி நாதர், பார்சுவநாதர், நேமிநாதர், வர்த்தமான மகாவீரர் — இவர்களை ஒத்த பெருமை உடையவரா?

இல்லை என்பதுதான் வியப்புக்குரிய செய்தி. பாகுபலி என்கிற அரச குமாரனுடைய சிலை இது. ஜைன மதத்தின் முதலாம் தீர்த்தங்கரர் என்று சொல்லப்படும் ஆதிநாதரின் நூறு பிள்ளைகளுள் இவரும் ஒருவர். ஆதிநாதர் அரசு துறந்தபோது தன் மூத்த மகன் பரதனுக்கு அயோத்தி மன்னனாக முடி சூட்டினார். பாகுபலியையும் பாண்டன் புராவுக்கு இளவரசனாக்கினார்.

ஆனால் மகா சக்கரவர்த்தியாக வேண்டும் என்கிற பேராசை காரணமாய் மூத்தவன் பரதன் அண்டை ராஜ்யங்களை அடிமை கொள்ளப் புறப்பட்டான். எதிர்த்துப் போர் தொடுத்தவன் பாகுபலி.

இந்தப் போர் சர்வ நாசத்தை உண்டாக்கு மென்று அஞ்சிய ஞானிகள் மாற்று வழி சொன்னார்கள். ''நீங்கள் இரண்டு பேருமே நேருக்கு நேர் போர் செய்யுங்கள். யார் வெல்கிறீர்களோ அவரே பேரரசன்'' என்று.

திருஷ்டி யுத்தம், ஜல யுத்தம், மல் யுத்தம் என்று மூன்று முறைகளையும்வெற்றிகொண்ட பாகுபலி நான்காவதாய் முஷ்டி யுத்தத்துக்குக் கையை மடக்கினான். பரதனின் தலை நொறுங்க வேண்டிய நேரம்....

''இத்தனை காலமும் தந்தைக்கு அடுத்த ஸ்தானத்தில் தான் மதித்துப் போற்றிய

# வெந்து தணிந்த காடுகள்

இந்திரா பார்த்தசாரதி

## 16

இன்டர் நாஷனல் சென்டரில் விம்மியைப் பார்த்துவிட்டுத் திரும்பிய ராதிகா ஆஃபீஸ் செல்லும் மனநிலையில் இல்லை. நேரே வீட்டுக்குச் சென்றாள்.

சீக்கிரம் திரும்பிய அவளைப் பூர்ணிமா சிறிது ஆச்சரியத்தோடு பார்த்தாள். பூர்ணிமா அவளைப் பரிபூர்ண சம்மதத்துடன் ஏற்றுக்கொள்ளவில்லை என்பது அவளுக்குத் தெரிந்த விஷயம்தான். இயந்திர கதியில் அவளுடைய தேவைகளையோ கட்டளைகளையோ அல்லது வேண்டுகோள்களையோ அவள் நிறைவேற்றுவதைப் பார்த்தால் ராதிகாவுக்கு அப்படித்தான் தோன்றியது. விம்மிக்கும் இவளுக்குமிடையே நெருக்கமான உறவு இருந்திருக்க வேண்டும். விம்மி வீட்டை விட்டுச் சென்றதையும், அவளிடத்தில் தான் வந்திருப்பதையும் பூர்ணிமாவால் ஜீரணிக்க முடியவில்லையோ என்ற சந்தேகம் ராதிகாவுக்கு இருந்து கொண்டே இருந்தது.

ராதிகா தன் அறைக்குச் சென்று படுத்துக் கொண்டாள்.

பூர்ணிமா அறை வாசலில் வந்து நின்றாள்.

அவள் எதற்காக வந்து நிற்கிறாள் என்று ராதிகாவுக்குத் தெரியும். அவள் தன் வாயினால் 'உங்களுக்கு என்ன வேண்டும்?' என்று கேட்க மாட்டாள். ஏதாவது தேவையாயிருந்தால் ராதிகாதான் சொல்ல வேண்டும்.

''ஒன்றும் வேண்டாம் பூர்ணிமா...''

பூர்ணிமா போய் விட்டாள்.

இன்று மத்தியானம் அருணிடம் விம்மியும் தாமோதரனும் இருந்த போது அவன் அப்படிப் பேசியிருக்க வேண்டாமென்று ராதிகாவுக்குத் தோன்றிற்று. கோபத்தை அடக்கிக்கொண்டு அருண் உடனே எழுந்து சென்று விட்டான்.

ஆனால் அவன் செய்தது சரியா? விம்மியை அவன் யதேச்சையாக அங்கு சந்தித்திருக்கலாம். அவளுடன் பேச வேண்டுமென்ற ஆர்வத்தில் தன்னை அங்கு வர வேண்டாமென்று கூறியது கோழைத்தனமல்லாமல் வேறென்ன?

விம்மியோடு அவன் பேச விரும்பியதில் ஆச்சரியமொன்றுமில்லை. ஒரு காலத்தில் அவனுக்கு அடங்கிய



மனைவியாக, தன்னை அவனுடன் பரிபூரண மாக 'ஐக்கியப்படுத்திக் கொண்டு விட்டதாக' அவன் கற்பனை செய்த ஒருத்தி இன்று பிரபல மடைந்துவிட்ட ஒரு பெண். அவள் முகம் இன்று பலருக்குத் தெரிகிறது. அருணின் மனைவியாக அல்ல. ஒரு சிறந்த ஓவியத் துறை மேதையாக.

விம்மியோடு ஒப்பிடும்போது அவள் வாழ்க்கை தோல்விதான். அவளுடைய முகம் யாருக்குத் தெரியும்? தொழில் அதிபர் களுக்கு, அரசாங்க உத்தியோகஸ்தர்களுக்கு, ஐந்து நட்சத்திர ஓட்டல் சிப்பந்திகளுக்கு, நாலைந்து விஸ்கிகளுக்குப் பிறகு 'இவள் தனக்குக் கிடைக்க மாட்டாளா?' என்று ஏங்கும் கிழப் பருவம் எய்திவிட்ட சமூகப் பெரும் புள்ளிகளுக்கு... தொழில் துறையில் அவளுடைய திறமையும், சுதந்திர உணர்வும் அவளை எங்கு கொண்டு போய் நிறுத்தியிருக் கின்றன?

ஓடிப்போன கணவன், குற்ற உணர்வுடன் கஷ்டப்படும் இன்னொருவனுடன் கூடிய வாழ்க்கை, அம்மா என்ற பாச உணர்வு சிறிதும் இல்லாத மகன், தினந்தோறும் விஸ்கி.....

இதுதான் வாழ்க்கையா?

பின் எதுதான் வாழ்க்கை?

விம்மி சந்தோஷமாக இருக்கிறாளா? தாமோதரன் எதிரில் அவளால் இந்தக் கேள்வியைக் கேட்க முடியவில்லை.

இன்று மத்தியானம் அவள் பேசிக் கொண் டிருந்தபோது, அவன் யதேச்சையாகத் தாமோ தரனும் விம்மியும் ஒருவரை யொருவர் பார்த் துக்கொண்டதைக் கவனித்தான். அப் பார்வைகளின் சந்திப்பில், நிலை கொள்ளாமல் தவிக்கும் ஒரு சங்கட உணர்வு தெரிந்தது. இருவரும் ஒருவரை யொருவர் அந்நியரைப் போல் பார்த்துக் கொள்கின்றனரோ என்று அவளுக்குத் தோன்றிற்று. இது அவ ளுடைய பிரமையாகவும் இருக்கலாம்.

பூர்ணிமா மறுபடியும் வந்து நின்றாள்.

''என்ன பூர்ணிமா?''

''ஃபோன்.''

சிந்தனையில் ஆழ்ந்திருந்த அவளுக்கு ஃபோன் ஒலித்தது கூடக் காதில் விழவில்லை.

அவள் எழுந்து சென்றாள்.

''மிஸஸ் ராதிகா....?''

''எஸ்....''

பேசியவர் தம்மை ராகுல் படிக்கும் கல் லூரியின் தலைவர் என்று அறிமுகப்படுத்திக் கொண்டார். ராதிகா அவரை வந்து உடனே சந்திக்க முடியுமா?

''ஏன் என்ன ஆயிற்று? ராகுலுக்கு...?''

''ராகுலுக்கு ஒன்றுமில்லை.... உங்களுடன் நான் ராகுலைப் பற்றிப் பேச வேண்டும், அவ்வளவுதான்... வருகிறீர்களா?''

''சரி....''



ராதிகா காரில் போகும்போது யோசித்தாள். எதைப் பற்றி இருக்கும்? ராகுலின் படிப்பைப் பற்றி நிச்சயமாக இருக்க முடியாது. அவன்தான் வகுப்பில் 'முதல் மாணவன். அடிக்கடி ஆசிரியர்களுடன் சர்ச்சை செய்கிறான் என்பதும் அவள் கேள்விப்பட்ட விஷயம்தான்.

அவளுக்கு ஒரு சமயம் டைபாய்டு வந்து நர்ஸிங் ஹோமில் பதினைந்து நாட்கள் இருந்தாள். ராகுலுக்குச் செய்தி அனுப்பியும் அவன் வந்து பார்க்கவே யில்லை.

உடம்பு தேறி அவள் அவனைப் பார்க்கச் சென்றபோது, அவன் கேட்டான்: ''என்னை ஆஸ்பத்திரியில் வந்து பார்க்கணும்னு கூட உனக்குத் தோணலியா?''

''மை மதர் ஈஸ் டெட்... வாஸ் இட் டுடே ஆர் எஸ்டர் டே?''

''என்ன இது?''

''காமு எழுதின நாவல்லே இப்படித்தான் ஒருத்தன் கேக்கறான்... ஜாய்ஸ் என்ன சொல்றான் தெரியுமா, மை மதர் ஈஸ் பீஸ்ட்லி டெட்.... ஷோபன் ஹவர்....''

''ஷட் அப்.''

''தாங்க்யூ மேடம்.... ஹாஸ்டலுக்குக் கட்டணும். பணம் கொண்டு வந்திருக்கியா?''

இதற்குப் பிறகு இரண்டு மாதங்கள் அவள் அவனைப் பார்க்கச் செல்லவேயில்லை. 'செக்' மட்டும் அனுப்பிக் கொண்டிருந்தாள். அவன் பார்க்க வரவில்லை என்பதைப் பற்றி அவன் கவலைப்பட்டதாகவும் தெரியவில்லை.

அவனிடம் அவளுக்குக் கொஞ்சம் கூடப் பாசம் இல்லாதது போல் அவன் காட்டிக் கொண்டாலும், பாசத்தினால் ஏற்பட்ட கோபத்தின் காரணமாகத்தான் அவன் இப்படி நடந்து கொள்கிறானா? — ஹாம்லெட்டுக்கு அவன் தாயின் மீதிருந்த பாசத்தின் காரணமாகத்தான் அவள் அவன் மதிப்பில் தாழ்ந்தபோது அவன் அவளை வெறுக்கத் தொடங்கினான் என்று அவள் கேள்விப்பட்டிருக்கிறாள். பாசம், பந்தம், விருப்பு, வெறுப்பு போன்றவை பைத்தியக்கார உணர்வுகள் என்று ராகுல் அடிக்கடி கூறினாலும் அவன் அவளை வெறுக்கிறான் என்பதில் சந்தேகமில்லை. இல்லாவிட்டால் அவன் 'காமு, ஜாய்ஸ், ஷோபன் ஹவர்' என்று சொல்ல வேண்டிய காரணம் என்ன?

ஜனவரி 26 என்றவுடன் 'குடியரசு'தான் நமக்கு ஞாபகம் வரும். ஆனால் அன்று நடந்த பிற முக்கிய நிகழ்ச்சிகள் இதோ.

ஜனவரி 26 1853 — பாரதத்தில் முதன் முதலாக இரயில் வண்டி ஓட்டப்பட்டது

ஜனவரி 26 1862 — பாரதத்தில் முதன் முதலாகத் தபால் தந்தித் துறை துவங்கப்பட்டது.

ஜனவரி 26 1866 — சூயஸ் கால்வாய், போக்குவரத்துக்குத் துவக்கப்பட்டது.

ஜனவரி 26 1885 — இந்திய தேசிய காங்கிரஸ் துவங்கப்பட்டது.

ஜனவரி 26 1888 — பாரதத்தில் தொலைபேசி முதன் முதலில் ஆரம்பிக்கப்பட்டது.

ஜனவரி 26 1930 — பாரதத்தில் 'சுதந்திரப் பிரகடனம்' காங்கிரஸால் செய்யப்பட்டது.

ஜனவரி 26 1950 — பாரதம் 'குடியரசு' ஆனது.

- நிரஞ்சனா



ராதிகா கல்லூரி வாசலில் காரை நிறுத்தி விட்டு உள்ளே சென்றாள். கல்லூரித் தலைவர் அவளை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார் என்று தெரிந்தது.

அவளைப் பார்த்ததும் முகத்தில் எந்தவித உணர்ச்சியுமின்றி, ''உட்காருங்கள்'' என்றார்.

சிறிது நேரம் மௌனம். பிறகு சொன்னார்: ''ராகுல் மிகவும் கெட்டிக்கார மாணவன், சந்தேகமில்லை. இந்த ஆண்டு பல்கலைக் கழகத் தேர்வில் முதலாவதாக வருவான் என்று நான் எதிர்பார்க்கிறேன். ஆனால் அவன் மிகவும் கொடிய பழக்கத்துக்கு அடிமையாகி யிருக்கிறான்....''

''என்ன?''

''மாத்திரை..நேற்றிரவு அவன் அறைக்குத் திடீரெனச் சென்று அங்கிருந்த மாத்திரைகளை யெல்லாம் பறிமுதல் செய்தேன். இதன் காரணமாக அவன் ஹாஸ்டல் அறையின் கண்ணாடிகளை யெல்லாம் உடைத்துப் பெரிய கலாட்டாச் செய்திருக்கிறான். அவன்மீது ஒழுங்கு நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று ஆசிரியர்கள் கூறுகிறார்கள். இதற்கு முன் உங்களிடம் இதைப் பற்றிப் பேசவேண்டும் என்பதற்காகத்தான் உங்களை அழைத்தேன்....''

ராதிகா பேசாமல் சிறிது நேரம் உட்கார்ந்திருந்தாள். வன்முறைக்குச் செல்லும் அளவுக்கு அவன் இந்தப் பழக்கத்துக்கு அடிமையாகியிருக்கிறான் என்றால்?--இதற்கு மருத்துவச் சிகிச்சையைத்தவிர வேறென்ன பரிகாரம்? மருத்துவச் சிகிச்சைக்கு அவன் உடன்படுவான் என்பது என்ன நிச்சயம்?

''கெட்டிக்காரப் பையன் இப்படிக் கெட்டுப்போவதை நான் விரும்பவில்லை. நான் உங்களை ஒன்று கேட்கலாமா?''

''என்ன?''

''நீங்கள் உள்ளூரில் இருக்கும்போதே அவன் எதற்காக ஹாஸ்டலிலிருந்து படிக்க வேண்டும்? உங்கள் நேரடிக் கண்காணிப்பிலேயே அவன் இருப்பது நல்லது என்று உங்களுக்குத் தோன்றவில்லையா?''

''என்னுடன் இருப்பதை அவன் விரும்பவில்லை. இதற்கு என்ன காரணம் என்று பதில் சொல்லும்படி என்னை வற்புறுத்தாதீர்கள்.''

கல்லூரி முதல்வர் அவளைச் சிறிது நேரம் உற்றுப் பார்த்தார். பிறகு கேட்டார்: ''அவனை இனி ஹாஸ்டலில் வைத்துக் கொள்ள முடியாது. இந்தப் பிரச்னையை எப்படித்தான் தீர்ப்பது?''

''அவன் இப்பொழுது எங்கிருக்கிறான்?''

''இருங்கள் கூப்பிடுகிறேன்.''

அவர் மணியை அழுத்தினார். சப்ராஸி உள்ளே வந்தான். அவர் ஒரு துண்டுக் காகிதத்தில் எழுதி, ''இந்தப் பையன் அலுவலக அறையில் இருக்கிறான். அழைத்துக்கொண்டு வா'' என்றார். சப்ராஸி சென்றான்.

ஒருவர்: "ஒரு பத்து ரூபாய் இருந்தாக் கொடுங்களேன்?"
மற்றவர்: "ஸாரி... என்னிடம் பணம் சுத்தமாக் கிடையாது...!"
ஒருவர்: "'அழுக்கா'இருந்தாலும் பரவாயில்லே கொடுங்க?"

-பொன். ஜெயசிங்



"வீட்டில் இருந்தபோதே அவனுக்கு இந்தப் பழக்கம் ஏற்பட்டு விட்டதா?" என்று கேட்டார் முதல்வர்.

"அவன் பல வருஷங்களாக ஹாஸ்டலில் தானிருக்கிறான்."

"பள்ளிக்கூட நாட்களிலிருந்தா?"

"ஆமாம்."

"ஏன்?"

"பதில் சொல்லும்படி வற்புறுத்தாதீர்கள்."

கல்லூரி முதல்வர் புன்னகை செய்தார்.

"எதற்குச் சிரிக்கிறீர்கள்?"

"மன்னிக்கவும்... உங்களுக்கும் இந்தப் பழக்கம் உண்டா?"

"இந்தப் பழக்கம் இல்லை."

"அப்படி யென்றால்?"

"ராகுலின் அப்பா எங்களை விட்டுப் பல வருஷங்களுக்கு முன்பேபோய்விட்டார். துபாயில் இருப்பதாகக் கேள்விப்பட்டேன். நான் அதைப் பற்றிக் கவலைப்படவில்லை. ராகுலுக்கும் அவன் தந்தையின் மீது மதிப்புக் கிடையாது.... நான் இப்போது ஒரு நண்பருடன் வசித்துக் கொண்டிருக்கிறேன். ராகுலுக்கு அவரைக் கண்டாலும் பிடிக்காது. பதில் சொல்ல வேண்டாம் என்றுதான் பார்த்தேன்.... நீங்கள் மிகவும் வற்புறுத்துகிறீர்கள்."

முதல்வர் கொஞ்ச நேர மௌனத்துக்குப் பின் சொன்னார்: "ராகுலின் பிரச்னை எனக்கு இப்பொழுது ஓரளவு புரிகிறது..."

அப்பொழுது ராகுல் உள்ளே வந்தான். அம்மாவைப் பார்த்ததும் சிறிது திடுக்கிட்டு நின்றான்.

"உள்ளே வா" என்றார் முதல்வர்.

அவன் வந்து ராதிகாவின் அருகில்நின்றான்.

"உட்கார்..."

அவன் தயங்கியபடியே உட்கார்ந்தான்.

"உனக்கு என்னுடன் இருப்பதில் ஆட்சேபணை இல்லையே?" என்று கேட்டார் முதல்வர்.

ராதிகா சிறிது ஆச்சரியத்துடன் அவரைப் பார்த்தாள்.

"எங்கே?" என்று கேட்டான் ராகுல்.

"என் வீட்டில்.... நீ இனி ஹாஸ்டலில் இருக்க முடியாது."

"அவன் எதற்காக உங்கள் வீட்டில் இருக்க வேண்டும்?" என்று கேட்டாள் ராதிகா:

"இதைப் பற்றி நான் முடிவு செய்ய வேண்டும், மேடம்:..." என்றான் ராகுல்.

ராதிகா அவனைக் கோபத்துடன் பார்த்தாள்.

"என் மகனை என்னிடமிருந்து திருடிக் கொள்ளப் பார்க்கிறீர்கள்..." என்றாள் முதல்வரிடம் சிறிது உணர்ச்சி வசப்பட்டு.

"ஆற்றல் மிகுந்த ஒரு புத்திசாலிப் பையன் சமூகத்துக்குச் சொந்தமானவன். ஒரு பூச்செடியை வளர்ப்பது போல் அவனை மிகவும் கவனமாகப் போற்றிப் பாதுகாக்க வேண்டும். ராகுலைப் பற்றி மற்றைய ஆசிரியர்கள் என்ன சொன்னாலும் அவனிடம் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. அவனுடைய பிரச்னையைப் புரிந்து கொண்ட அளவில், அவன் இனி என் பொறுப்பில் இருப்பதுதான் நல்லது, சமூகத்துக்கும் நல்லது என்று எனக்குத் தோன்றுகிறது."

"அவனுக்கு ஒரு பிரச்னையும் இல்லை. நீங்கள்தான் பிரச்னையை உருவாக்கப் பார்க்கிறீர்கள்...." என்றாள் ராதிகா.

"பொருளாதாரப் பாதுகாப்புக்காக இந்தப் பெண்மணியை நான் எதிர்பார்த்திருக்க வேண்டிய அவசியமில்லை என்று சொல்லுகிறீர்கள்?" என்று கேட்டான் ராகுல்.

"பொருளாதாரப் பாதுகாப்பைத் தவிர எனக்கும் உனக்கும் வேறு எந்த விதத் தொடர்பும் கிடையாதா?" என்று சற்று கோபத்துடன் வினவினாள் ராதிகா.

"இல்லை."

ராதிகாவுக்கு அளவுகடந்த சினம் ஏற்பட்டது. அவளுக்கு என்ன சொல்வது என்றே தெரியவில்லை. யார்மீது கோபப் படுவதென்று புரியாத நிலையில் அவளுக்குப் பெருமூச்சு வாங்கியது. அவளுடைய வாழ்க்கை வெற்றியா, தோல்வியா என்று சற்று நேரத்துக்கு முன்புதான் அவள் யோசித்துக்கொண்டிருந்தாள்.

தொழில் துறையில் அவளுடைய திறமையும், சுதந்திர உணர்வும் அவளை எங்கு கொண்டு போய் நிறுத்தி யிருக்கின்றன!

தாய்ப் பாசம் இல்லாவிட்டாலும் பரவாயில்லை. 'உனக்கும் எனக்கும் எந்த விதத் தொடர்பும் கிடையாது' என்று இன்னொருவர் எதிரில் அவளை நிராகரித்துவிட்டமகன்!'பாசம் பந்தம், விருப்பு, வெறுப்பு போன்றவை பைத்தியக்கார உணர்வுகள்' என்று இதுவரை சொல்லி வந்தவன், யாரேனும் தன் மீது அன்பு செலுத்த வேண்டும் என்பதற்காகவா ஏங்கிக் காத்துக் கொண்டிருக்கிறான்?

அவனுக்கு அவளிடம் பாசம் இல்லை என்று அவன் முடிவுக்கு வர என்ன காரணம்? அவன் அவனுடைய வாழ்க்கையை அவள் விருப்பப்படி நடத்த முயன்றது, அதாவது தன்னுடைய சுதந்திர உணர்வை நிலைநாட்டிக் கொள்வதில் காட்டிய தீவிரம், அவளை வெறும் சுயநலவாதியாக அடையாளம் காட்டியிருக்கிறதோ? பார்க்கப் போனால், ராகுவிடம் அவளுக்கு இவ்வளவு பாசம் இருக்கின்றது என்பது அவள் அவனை இப்படி உதாசீனம் செய்யும் இந்தத் தருணத்தில் தானே புரியத் தொடங்கி யிருக்கிறது.

(தொடரும்)

# "வித்தியாசங்கள் என்ன?" போட்டி

## முதல் சரியான 15,000 விடைகளுக்கே விசேஷ தள்ளுபடி கூப்பன்கள்!

பாலிதீன் பாக்கெட்டிலுள்ள புதிய சன்சார் டிட்டர்ஜெண்ட் பவுடரின் விலை 1 Kg. ரூ. 12.50 (வரிகள் தனி) ஆனால் விசேஷ சலுகையாக சன்சார் உங்களுக்கு ரூ. 9.50 (வரிகள் தனி) க்கு கிடைக்கிறது. இப்போட்டியில் கலந்து கொள்வதன் மூலம் விசேஷ அறிமுகச் சலுகையைப் பெறுங்கள். இந்த டிட்டர்ஜெண்ட் பவுடர் உங்கள் பணத்திற்கு சரியான மதிப்பைத் தரும் என்று நீங்களே கண்டுணர்வீர்கள்.



இங்கே கத்தரிக்கவும்

சன்சார் பாலிதீன் பாக்கெட்டில் எத்தனை கலர்கள் உள்ளன?

_ _ _ _ _ _ _ _ _ _

சுலபமான இலவசப் போட்டி







- மேலே உள்ள கேள்விக்கு குறிப்பிட்ட இடத்தில் விடை அளியுங்கள்.
- மேலே உள்ள இரண்டு பாக்கெட்டுகளுக்கும் ஆறு வித்தியாசங்கள் உள்ளன. 'A' உண்மையான பாக்கெட். வித்தியாசங்களை 'B' பாக்கெட்டில் சிறு வட்டத்தில் குறியிட்டு நுழைவுத்தாளை கத்தரித்து; அதனுடன் உங்களுடைய பெயர், விலாசத்தை தெளிவாக ஒரு வெள்ளைத்தாளில் எழுதி, கீழ்கண்ட விலாசத்திற்கு அனுப்பி வைக்கவும்.

  "வித்தியாசங்கள் என்ன" போட்டி,
  மைசூர் சேல்ஸ் இண்டர்நேஷனல் லிட்,
  லக்ஷ்மி பவன், 609, மவுண்ட் ரோடு, சென்னை-600 006.
- இப்போட்டியில் தீர்ப்புக் குழுவினரின் தீர்ப்பே முடிவானது. இது சம்பந்தமாக வேறு எந்த கடிதப் போக்குவரத்தும் அனுமதிக்கப் படமாட்டாது.
- ஒரு குடும்பத்திற்கு ஒரு நுழைவுத்தாள் மட்டுமே.

முந்துங்கள் இன்றே கலந்து கொள்ளுங்கள்

KI

MCA-SDP-101-TAM

# கல் மண்டபம்

ராஜேஷ்குமார்

இரவு நேரச் சாப்பாட்டை முடித்துக் கொண்டு, ஊர்ப்பெரியவர் பொன்னம்பலமும் ஊர் மணியம் ரங்கசாமியும் சின்னப் பண்ணை சிங்கார வேலரும் இன்னும் சில முக்கிய புள்ளிகளும் அரச மரத்து வெல்லப் பிள்ளையார் மண்டபத்துக்கு வந்த பின்னுடியும் செண்பக முருகன் கோயில் தர்மகர்த்தா தண்டமிழ் வேந்தன் வந்து சேரவில்லை.

ஒன்பது மணிக்கு மேல் சாவகாசமாய் வந்தார். மஸ்லின் ஜிப்பா, மைனர் செயின், சாயம் ஏற்றப்பட்ட கிராப், மெலிதான மீசை. தன் ஐம்பது வயது உடம்பை இளமைக்குத்திருப்ப முயன்று தோல்வி கண்டிருந்தார். அரசியல் கட்சி ஒன்றில் முக்கியமான பொறுப்பிலும், உள்ளூரில் தன் 'பெரிய மனுஷன்' தன்மையை நிலைநிறுத்திக் கொள்வதற்காகச் செண்பக முருகன் கோவில் தர்மகர்த்தா பொறுப்பிலும் இருப்பவர். கறுப்புச் சட்டை போடாத பகுத்தறிவுவாதி.

ஒவ்வொரு வருஷமும் வரும் ஆடிக் கிருத்திகை நாள் செண்பக முருகனுக்கு ரொம்பவும் விசேஷமான நாள். அந்த ஒரு நாள் விசேஷத்தை ஏழு நாளைக்கு விஸ்தரித்து கோயில் வருமானத்தைக் கணிசமாகப் பெருக்கி– அதில் கணிசமாய் எடுத்துத் தம் சட்டைப் பையை நிரப்பிக் கொள்கிறவர்.

இந்த வருட ஆடிக் கிருத்திகையின்போது கோயில் வருமானம் லட்ச ரூபாய்க்கு மேல் போக, அந்தப் பணத்தை ஏதாவது ஒரு நல்ல காரியத்துக்கு உபயோகப்படுத்தலாமே என்ற எண்ணத்தோடு ஊர்ப் பெரியவர் பொன்னம்பலம் ஒரு யோசனையைச் சொல்ல அதைப் பற்றி விரிவாகப் பேச இன்றைக்கு ராத்திரி அரச மரத்து வெல்லப் பிள்ளையார் மண்டபத்துக்கு ஊர் முக்கிய புள்ளிகள் வர வேண்டியது என்று தீர்மானிக்கப்பட்டது.

அதன்படி எல்லோரும் வந்து உட்கார்ந்திருந்தனர்.

ஊர்ப் பெரியவர் பொன்னம்பலம் பேச ஆரம்பித்தார். ''நம்ம ஊர் சின்ன ஊராயிருந்தாலும் இந்த மலைக் கோயிலும் அதில் இருக்கிற செண்பக முருகனும் நம்ம ஊரை ரொம்பப் பிரபலப்படுத்தியிருக்காங்க....''

தண்டமிழ் வேந்தன் அவருடைய பேச்சைக் குறுக்கீடு செய்கிற மாதிரி கடகடவென்று சிரித்தார்.

''ஏன் சிரிக்கிறீங்க?'' – பொன்னம்பலம் கேட்டார்.

''பின்னே சிரிக்காம என்ன பண்றது பொன்னம்பலம்? நம்ம ஊர் பிரபலமானதுக்குக் காரணம் பாழடைஞ்சு போன அந்த மலைக் கோயிலும் அந்த இரண்டரை அடி முருகன் சிலையும்தான்னு சொல்றீங்களே... மனசறிஞ்சுதான் சொல்றீங்களா? நான் இந்தக் கோயிலுக்குத் தர்மகர்த்தாவா வந்த பின்னுடிதான் நம்ம ஊர் பிரபலமாச்சு!.... ஒண்ணுமில்லாத ஆடிக் கிருத்திகை நாளை விசேஷ தினமாக மாற்றி அந்த முருகனுக்கு ஒரு மவுசு குடுத்ததே நான்தான்!''

முகம் மாறினார் பொன்னம்பலம்.

தர்மகர்த்தா பேசிக் கொண்டே போனார். ''இந்த வருஷம் உங்க முருகனுக்குக் கிடைச்சிருக்கிற எக்கச் சக்கமான வருமானத்துக்குக் காரணம் யாரு? நான்தான்! நான் மட்டும்





பாட்டுக் கச்சேரி... ரிக்கார்ட் டான்ஸ்... பொம்மலாட்டம் அது இதுன்னு ஏற்பாடு பண்ணுமே இருந்திருந்தேன்னு கோயிலோட உண்டியல் காலியாத்தான் இருக்கும்...''

ஊர் மணியம் பேச்சின் திசையை மாற்றினார். ''சரி.... சரி.... அந்தப் பேச்சை விடுங்க.. .. நீங்க செஞ்ச முயற்சி நல்ல முயற்சிதான். அதை யாரும் மறுக்க முடியாது. இப்ப நாம இங்கே எதுக்காகக் கூடியிருக்கோம்னு.... வந்த வருமானத்தை எந்த நல்ல காரியத்துக்குப் பயன்படுத்தலாம் என்று முடிவு பண்ணத்தான்.''

''ஒரு ஆரம்பப் பள்ளிக்கூடம் கட்டலாம். அதுக்கு மறைஞ்சு போன எங்க கட்சித் தலைவரோட பெயரை வைக்கலாம். அரசாங்கம் நம்ம ஊருக்கு நிறைய ஒத்தாசை பண்ணும்....''

''பள்ளிக்கூடத்துக்கு இப்ப என்ன அவசரம்? நம்ம ஊரோ சின்னக் கிராமம். நம்ம ஊருப் புள்ளைங்க இங்கிருந்து ரெண்டு பர்லாங் தூரத்தில் இருக்கிற மலையனூருக்குப் போய் நிம்மதியாய்ப் படிச்சுட்டு வர்றதுங்க! பள்ளிக்கூடத்தைக் காட்டிலும் முக்கியமா கோயிலோட ,மண்டபத்தைப் பழுது பார்க்கணும்... எந்தக் காலத்திலேயோ கட்டின அந்தச் செங்கல் சுவர் மண்டபம் மழையிலேயும் வெய்யிலேயும் அடிபட்டு ரொம்பச் சிதிலமாக் கெடக்குது. கருங்கல்லைக் கொண்டாந்து மண்டபத்தைக் கட்டணும்.''

தண்டமிழ் வேந்தன் சீறினார்: ''என்னவிளையாடறீங்களா? அவ்ளோ பெரிய மண்டபத்தை முழுதும் கருங்கல்லாலே கட்டி முடிக்கணும்னு லட்சக் கணக்கிலே செலவாகுமே. அவ்வளவு பணம் நம்ம கிட்ட இல்லையே...''

''இருக்கிற பணத்தை வெச்சுக்கிட்டு முதல்லே மேற் கூரையை மட்டும் கருங்கல்லாலே போடுவோம். மேற் கூரையும் தூண்களும் செம்மத்தியாப் போட்டுட்டோம்னு பின்னுடி வர்ற வருமானத்தை வச்சு மண்டபத்தோட மத்த வேலைகளை யெல்லாம் முடிச்சுடலாம். நம்ம ஊருக்குப் பெருமை தேடித் தர்ற அந்தச் செண்பக முருகன் குடியிருக்கும் வீட்டை நாம நல்ல விதமாக் கட்டிப் பெருமைப்படுத்த வேண்டாமா'' — பொன்னம்பலம் இதமானகுரலில்



சொல்ல எல்லோரும் ஏகமனதாகத் தலைகளை அசைக்க—

தர்மகர்த்தா தண்டமிழ் வேந்தன் மட்டும் பாம்பாய்ச் சீறினார். "இரண்டரை அடி சிலை இருக்கிற ஓர் இடத்துக்கு லட்சக் கணக்கிலே செலவு பண்றதா? சே! முருகன் முருகன்னு ஒரு கற்பனையைச் சொல்லிக்கிட்டு அந்தக் கற்பனைக்காக ஒரு கருங்கல் மண்டபம் கட்டறதா? நான் இதுக்கு ஒத்துக்க மாட்டேன்!"

ஊர் மணியம் பணிவான குரலில் சொன்னார்: "இதோ பாருங்க! ஒவ்வொருத்தருக்கும் ஒவ்வோர் ஆசை இருக்கலாம். கடவுள் நம்பிக்கை இல்லாத நீங்க இந்தக் கோயிலுக்கு எப்படியோ தர்மகர்த்தாவா ஆயிட்டீங்க. அதைப் பத்தித் தப்பில்லே... ஆனா அந்தக் கடவுள் வெறுப்பைப் பகிரங்கமா பேசறதுதான் சரியில்லே. நீங்க பள்ளிக் கூடம் கட்டலாம்னு சொன்னீங்க... நல்ல யோசனைதான்! ஆனா நம்ம சின்னக் கிராமத்துக்கு இப்போப் பள்ளிக்கூடம் அவசியமில்லே. அப்படி அவசியம் ஏற்பட்டிருந்தா சர்க்காரே பள்ளிக்கூடம் கட்டியிருக்கும். இப்போதைக்கு உடனடித் தேவை கோவில் மண்டபத்தைப் புதுப்பிக்கணும். கமிட்டி அங்கத்தினர்களிலே உங்களைத் தவிர மத்தவங்க எல்லோருமே இதுக்கு ஒப்புதல் தந்துட்டாங்க. நீங்க முரண்டு பிடிக்கிறது சரியில்லே...."

சரேலென்று எழுந்தார் தண்டமிழ் வேந்தன். "ஓஹோ! முரண்டு பிடிக்கிறேனா? அப்ப நீங்களே இருந்து அந்தப் பொம்மைக்கு கல் மண்டபத்தை எழுப்புங்க. இனி வருஷா வருஷம் வர்ற ஆடிக் கிருத்திகை விழாவையும் நீங்களே நடத்துங்க. தர்மகர்த்தா பதவியை மட்டும் நான் ராஜினாமாப் பண்ண மாட்டேன்.... அதை மட்டும் ஞாபகம் வெச்சுக்குங்க...."

விடுவிடுவென்று வெளியேறினார் தண்டமிழ் வேந்தன்.

ஏழு மாதம்!

செண்பக முருகனுக்கு முன்பிருந்த அந்தப் பிரும்மாண்டமான கல் மண்டபம் உருவாகி விட்டது. மேற் கூரையாய் அதே கருங்கல்! கீழே தரைக்கும் அதே கருங்கற்கள்!— கூரையைத் தாங்கி நிற்கும் தூண்களும் அதே கருங்கற்கள். ஒரே கல்லில் குடைந்து முடிக்கப்பட்ட மாதிரி ஒரு பிரமிப்பு அனைவரின் மனத்திலும் எழுந்தது.

இந்த ஏழு மாத காலத்தில் ஒரு தடவை கூட தண்டமிழ் வேந்தன் தப்பித் தவறிக்கூட உருவாகிக் கொண்டிருக்கும் கல் மண்டபத்தின் பக்கமாக வந்ததில்லை.

அந்த வருஷத்திய ஆடி மாதக் கிருத்திகை நெருங்கிக் கொண்டிருந்தது. இரண்டு மாதங்களுக்கு முன்பிருந்தே ஏற்பாடுகளைக் கவனிக்க வேண்டும்.

தர்மகர்த்தா தண்டமிழ் வேந்தனை அவருடைய வீட்டிலேயே போய்ச் சந்தித்தார்கள் ஊர்ப் பெரியவர்கள். இதமாய் எடுத்துச் சொன்னார்கள். "கோயில் விசேஷம் வர்றப்ப அந்தக் கோயிலுக்குத் தர்மகர்த்தாவா இருக்கிற நீங்க இப்படி ஒதுங்கி இருக்கிறது நல்லா இல்லீங்க.... உங்க விருப்பப்படி இந்த வருஷம் வர்ற கோயில் வருமானத்தில் ஒரு பள்ளிக்கூடம் கட்டலாம்... ம்... எழுந்திரிச்சு வாங்க... காரியங்களைக் கவனிக்கலாம்...."

"நான்தான் அன்னிக்குச் சொல்லிட்டேனே... உங்களோட முட்டாள்தனமான பக்திக்கெல்லாம் என்னாலே ஈடு கொடுக்க முடியாது. இருந்த கோயில் வருமானத்தை முழுதும் கொட்டி ஒரு மண்டபத்தைக் கட்டி வெச்சுட்டீங்க. இனி ஒரு மூணு மாசத்துக்கு நான் ஊரிலேயே இருக்க மாட்டேன். கட்சி விஷயமா அடிக்கடி மெட்ராஸ் போயிடுவேன். இனிமே என்னை எதுக்கும் எதிர்பார்க்காதீங்க" — பட்டென்று கையெடுத்துக் கும்பிட்டு எல்லோரையும் துரத்தாத குறையாக அனுப்பி வைத்தார்.

அவர்கள் சென்றவுடன் தமது மனைவியை அழைத்தார் தண்டமிழ் வேந்தன். "இதோ பார் வடிவு... இன்னிக்குச் சாயந்திரம் நான் மெட்ராஸ் போறேன். திரும்பி வரப் பத்து நாளாகும். நான் ஊர்ல இல்லாத நேரத்திலே நீயோ நம்ம குழந்தைகளோ யாருமே கோயில் பக்கம் போகக் கூடாது. அப்புறம் நான் பொல்லாதவனா மாறிடுவேன்....!"

"நீங்க இதுவரைக்கும் சொல்லிநான் எந்த வார்த்தையைத் தட்டிப் போயிருக்கேன்... உயிரே போனாலும் சரி போக மாட்டேன்."

திருப்தியாய் முகம் மலர்ந்தார் தண்டமிழ் வேந்தன்.

அன்றைக்கே மெட்ராஸுக்குப் புறப்பட்டுப் போனார்.

இரண்டு நாட்கள்...

சரியான மழை. வானத்தைச் சக்கையாய்ப் பிழிந்து விட்டுத்தான் மறுவேலை என்பதைப் போல் இடை விடாத மழை.

சென்னையில் ஒரு நண்பரின் அறை விடுதியில் தங்கியிருந்த தண்டமிழ் வேந்தன் சலித்துக் கொண்டார். "எந்த நேரத்திலே ஊரை விட்டுப் புறப்பட்டேனோ தெரியலே, சனியன் பிடிச்ச மழை சல்லடைத் தண்ணி

---

மாமனார்: "வேலைக்காரன் மூலம் நீங்க அனுப்பி வைத்த இரண்டு கிலோ பேரீச்சம்பழம் வந்து சேர்ந்தது ... ரொம்பத் தாங்க்ஸ் மாப்பிள்ளே...!"

மாப்பிள்ளை: "இதுக்குப் போய் எதுக்கு மாமா தாங்க்ஸ்...போன தீபாவளிக்கு நீங்க வாங்கிக் கொடுத்த ஸ்கூட்டரைப் போட்டுத்தானே அந்தப் பேரீச்சம்பழத்தை வாங்கினேன்...!"

- க. ராஜாஜி



# நகங்களில் பிரச்சினையா?

## மிருதுவான/உடைகின்ற/பிளவுபடும்/உரிந்துவிடும் மற்றும் வளர்ச்சியின்றி கட்டையான நகங்களா?

இப்போது நூதனமான பாக்கில் கிடைக்கிறது. கூடுதல் விலை ஏதுமின்றி!



உங்களுக்கு தேவை

# கால்ஷியம்-ஸாண்டோஸ்®

வில்லைகள். கால்ஷியம் ஸாண்டோஸ் உபயோகித்து ஏற்படும் மாறுதலைப் பாருங்கள்.

நாளுக்கு நான்கு வெனில்லா சுவையூட்டப் பெற்ற கால்ஷியம் ஸாண்டோஸ் வில்லைகளே போதும். பதினைந்து நாட்களில் உங்கள் நகங்கள் வலுவடைந்து நல்லழகு கூடிப் பொலியும். விஞ்ஞான பரிசோதனைகள் இதனை நிரூபித்துள்ளன. உட்கொள்வீர் கால்ஷியம் ஸாண்டோஸ்-உலகிலேயே மிகச்சிறந்த கால்ஷியம். ஸ்விட்ஸர்லாந்து நாட்டில் ஸாண்டோஸால் உருவாக்கப்பட்டது.

கால்ஷியம் ஸாண்டோஸ் வில்லைகளைக் கேட்டு வாங்குங்கள். மாற்று எதனையும் ஏற்காதீர்கள்.

நகங்களில் தொல்லை மீண்டும் தோன்றினால் மீண்டும் ஒரு தவணை உட்கொள்ளுங்கள்.




daCunha-S-22 TM

யாட்டம் பெய்ஞ்சுகட்டே இருக்கு. ரெண்டு நாளும் அறைக்குள்ளேயே இருந்துட்டேன்.''

ஜன்னல் வழியே வானத்தை எட்டிப் பார்த்த நண்பர் சொன்னார்: ''வானம் வெளி வாங்க ஆரம்பிச்சுடுச்சு. இனி மழை நின்னுடும். ரெண்டு மணி நேரத்துக்குள்ளார நாம வெளியே போயிடலாம்....''

அந்த நண்பர் சொன்ன மாதிரியேஇரண்டு மணி நேரத்துக்குள் வானம் கொஞ்சம் வெளிற மழை தற்காலிகமாய் விலகிக் கொண்டது.

அறையைப் பூட்டிக் கொண்டு இருவரும் வெளியே வர—

கீழே இருந்த பெட்டிக் கடை அருகே ஒருவர்பேப்பரை விரித்து வைத்துக் கொண்டு உரத்த குரலில் படித்துக் கொண்டிருந்தார்.

''மலையனூர் அருகே ஒரு கிராமம் வெள்ளத்தில் மூழ்கியது.....''

ரோட்டில் தேங்கியிருந்த மழைத் தண்ணீரைத் தாண்டிக் கொண்டு போக முற்பட்ட தண்டமிழ் வேந்தன் அந்தப் பத்திரிகைச் செய்தியைக் கேட்டுத் திடுக்கிட்டார். பரபரப்புடன் அந்த நபரை நெருங்கி பேப்பரைப் பிடுங்காத குறையாக வாங்கிப் பார்த்தார். செய்தியை அவசரம் அவசரமாக மேய்ந்தார்.

'இரண்டு நாட்களாய் விடாமல் பெய்த பேய் மழையின் காரணமாக, மலையனூர் அருகே இருக்கும் செண்பகனூர் என்ற கிராமம் அடியோடு வெள்ளத்தில் மூழ்கிவிட்டது. அண்மையில் புதிதாய்க் கட்டப்பட்ட மலைக் கோயிலின் கல் மண்டபம்தான் அந்த ஊர் மக்களைக் காப்பாற்றி யிருக்கிறது. ஊருக்குள் வெள்ளம் புக ஆரம்பித்தபோதே மக்கள் தங்கள் அத்தியாவசிய உடைமைகளோடு மலைமேல் இருந்த செண்பக முருகன் கோயில் கல் மண்டபத்துக்கு அப்புறப் படுத்தப்பட்டார்கள்.'

தண்டமிழ் வேந்தன் எச்சிலைக் கூட்டித் திகிலோடு விழுங்கியபடி மேலே படிக்க ஆரம்பித்தார்.

'இந்தக் கிராமத்தில் ஒரே குடும்பத்தைச் சேர்ந்த ஏழு பேர் வெள்ளத்துக்குப் பலியாகி யிருக்கிறார்கள். அக்கோயிலின் தர்மகர்த்தாவான திரு தண்டமிழ் வேந்தனின் குடும்பம் தான் அது என்பது ஊர்ஜிதமாகியுள்ளது. ஊர் மக்கள் எல்லோருமே கோயிலின் கல் மண்டபத்துக்கு அப்புறப்படுத்தப்பட்ட பொழுது தண்டமிழ் வேந்தன் குடும்பத்தினர் மட்டும் ஏனோ வரமறுத்துவிட்டனராம். ஆறு குழந்தைகளும் அவருடைய மனைவியும் ஒருவரை யொருவர் அணைத்தபடி பிணமாய்க் கிடக்கும் காட்சி மனத்தை உருக்குவதாய் உள்ளது.... போலீஸாரும்....'

செய்தியைப் படிக்கப் படிக்க....

மயக்கமாய்ச் சரிந்தார் தர்மகர்த்தா தண்டமிழ் வேந்தன்.



# குலக்கொழுந்து

இந்தச்-சமுதாயத்தைப் புரிந்துகொள்ளாத கருணாநிதி, தாத்தா பாணிக் கதை எழுதி கைவ்வை நன்றாய்ச் சுட்டுக் கொண்டிருக்கிறார். பாச அண்ணா, நேசத் தங்கை,
காந்தம் — சாந்தம், அப்புறம் கன்னங்கள் — சின்னங்கள் இப்படி ஓல்ட் ஸ்டைல் வசனம்
தருமளவு கலைஞரின் தமிழ் வற்றிவிட்டதா? கை தட்டவும் இடங்களில்லாமல்
'உடன் பிறப்புக்களை' ஏமாற்றியிருப்பது நியாயமில்லை.
நான் மட்டும் குறைச்சலா என்று கொள்ளுத் தாத்தா பாணி டைரக்ஷன் ராமண்ணா.
குதூகலத்துக்குப் பெயர் பெற்றவர். இப்போது 'பெயர்' போகிறது.
அசல் சர்க்கஸ் பபூன் மாதிரி அசட்டுப் பிசட்டு கோணங்கியாய் வரும் அசோகன் வில்லனும்.
கொலை, கடத்தல் காரரான இவரைப் போலீஸ் மருந்துக்கும் தேடுவதில்லை.
நாயகன் ஜெய் — குட்டிக்கரணச் சண்டைகள்.
நாயகி ஸ்ரீப்ரியா — நடனங்கள்.
படத்தில் கொஞ்சம் சிரமப்பட்டு நடிப்பது சௌகார் ஜானகி. இரட்டை வேடம்.
வில்லியாய்க் குடித்து சிகரெட் பிடித்து, பழம் பெருமையை நிலைநாட்டுகிறார்.
ஒரு பாடலை ஹிட்டாக்கும் எம். எஸ். விசுவநாதன்.
காதில் பூ வைத்துக் கொண்டு பார்க்க வேண்டிய ரீல்.

—நளினி சாஸ்திரி.

செஞ்சிலுவை சங்கம் போன்று துயர்துடைக்கும் சேவைகளைச் செய்து வருவது இங்கிலாந்தில் உள்ள ஆக்ஸ்பேம் அமைப்பு. தனது நற்பணிகளுக்கு நிதி திரட்டுவதற்காக ஒரு நகைச்சுவைப் புத்தகத்தை வெளியிட்டுள்ளது. பிலிப்ஸ் கோமகனில் துவங்கி பல துறையில் புகழ் பெற்ற பிரமுகர்கள் பலரை, தாங்கள் ரசித்த அல்லது சொன்ன நகைச்சுவை குட்டிக் கதையை எழுதி அனுப்பும்படி வேண்டிக் கொண்டது. சுமார் 500 குட்டிக் கதைகள் கொண்ட இப்புத்தகத்திலிருந்து (தலைப்பு: பாஸ் இ போர்ட்) சில பொறுக்குமணிகள்.

### கிட்டத்தட்ட அவுட்!

புகழ்பெற்ற கிரிக்கெட் ஆட்டக்காரரான ஹாரால்ட் லார்வுட் ஒருநிதி திரட்டும் நிகழ்ச்சியாக ஏற்பாடு செய்யப்பட்ட கிரிக்கெட் மாட்சில் கலந்துகொண்டார்.

லார்வுட் புகழ் பெற்ற பௌலர். அவர் வீசிய பந்தை பாட்ஸ்மன் காலால் தடுத்து விட்டார். அம்பயரைப் பார்த்து ''ஹௌ ஈஸ் தட்?'' என்று கேட்டார். ''அவுட் இல்லை'' என்று அம்பயர்சாவதானமாகக் கூறிவிட்டார்.




அடுத்த தடவை, பாட்ஸ்மெனின் மட்டையில் பந்து பட்டு, அதை விக்கெட் கீப்பர் பிடித்தபோதும் அம்பயர் 'அவுட் இல்லை' என்று கூறிவிட்டார். இப்படி இரண்டு மூன்று தடவை ஆன பிறகு லார்வுட் ஒரு படுவேகப் பந்தை வீசினார். அது நேராகப் போய் ஸ்டம்புகளை அலக்காகத் தூக்கி எறிந்தது.

லார்வுட் மிகவும் சாவதானமாக அம்பயரைப் பார்த்துச் சொன்னார்: ''கிட்டத்தட்ட இந்தச் சமயம் அவுட் ஆக்கிவிட்டேன் இல்லையா?''

### கீழே விழுவேன்!

ஒரு பாதிரியார் தன் நண்பரின் வீட்டுக்குச் சென்றார். அங்கு ஒரு பேசும் கிளி இருந்தது. அதன் கால்களில் இரண்டு துண்டு ரிப்பன்கள் கட்டப்பட்டிருந்தன.

நண்பர், ''இந்த வலது கால் ரிப்பனை இழுத்தால் இது தேவகீதம் ஒன்றைப் பாடும். இடது கால் ரிப்பனை இழுத்தால் ஒரு பாப் பாடலைப் பாடும்'' என்றார்.

பாதிரியார் கேட்டார்: ''சரி, இரண்டு ரிப்பனையும் பிடித்து இழுத்தால்?''

சட்டென்று கிளி, ''நான் தொபீல் என்று கீழே விழுவேன், முட்டாள்!'' என்றது.

### நம்பாவிட்டாலும்...

ஓர் அணுவிஞ்ஞானி தனது ஆராய்ச்சிக் கூடத்தின் வாயிற்படியில் குதிரை லாடம் ஒன்றை அடித்து வைத்திருந்தார்.

அதைப் பார்த்த அவரது நண்பர், ''குதிரைலாடம் இருந்தால் அதிர்ஷ்டம் என்பது போன்ற மூட நம்பிக்கைகள் உங்களிடம் உள்ளதா?'' என்று கேட்டார்.

விஞ்ஞானி கூறினார்: ''சீச்சீ... இந்தமாதிரி நம்பிக்கைகள் எல்லாம் எனக்குக் கிடையாது. நான் நம்பா விட்டாலும் குதிரை லாடம் அதிர்ஷ்டத்தைக் கொண்டு வரும் என்று எனக்குச் சிலர் சொல்லி யிருக்கிறார்கள்!''

### எங்கே போகிறது பஸ்?

யுத்த காலத்தில் சிலர்ராணுவத்தில் சேரா திருப்பதற்காகப் பொய்யான நோய்களைச் சொல்வார்கள். அப்படிப்பட்ட ஒருவர் தனக்குக் கண் பார்வை சரியில்லை என்று சொன்னார். கண் மருத்துவரும் பலசோதனைகள் செய்து பார்த்தார். கிட்டத்தட்ட குருடு போன்றே அந்த ஆசாமி நடந்து கொண்டார். ராணுவத்தில் சேராமல் இருக்கவே இப்படிச் செய்கிறார் என்று டாக்டருக்குச் சந்தேகம். ஆனால் அவரால் ஒன்றும் செய்ய முடியவில்லை.

அன்று மாலை டாக்டர் ஒரு சினிமாவுக்குப் போனார். பக்கத்து சீட்டில் யார்? அந்த ஆசாமிதான். போலீஸைக் கூப்பிட்டு அவரைக் கைது செய்யச் சொல்லலாம் என்று அவர் நினைத்தபோது அந்த ஆசாமி நிதானமாக டாக்டரைப் பார்த்துக் கேட்டார்: ''எக்ஸ்க்யூஸ் மீ, அம்மணி, இந்த பஸ் விக்டோரியாஸ்டேஷனுக்கு எப்போது போகும்?''

### காலையிலா மாலையிலா?

ஒரு யுத்தக் கைதி தப்பித்துக் கொண்டு அமெரிக்கா போய் விட்டான். அமெரிக்காவில் பிரஜையாக ஆகிவிட்டால் அவனை யாரும் தொல்லை தர முடியாது. குறிப்பிட்ட ஆபீசுக்குச் சென்று விண்ணப்பித்துக்கொண்டான்.

''நீ எந்த நாட்டிலிருந்து வருகிறாய்?'' என்று அங்கு ஒரு அதிகாரி கேட்டார்.

''நான் ருமேனியா நாட்டிலிருந்து வருகிறேன்.''

''ருமேனியா நாட்டுக் கோட்டா பூர்த்தியாகிவிட்டது. அதிகப்படியாகக்கூட சிலரை எடுத்துக் கொண்டு விட்டோம். உன் மனுவைப்பன்னிரண்டு வருஷங்கள் கழித்துத்தான் பரிசீலிப்போம். போய் அப்போது வா'' என்றார்.

கைதி நிதானமாகக் கேட்டான்: ''காலையில் வரட்டுமா? லஞ்சுக்குப் பிறகு வரட்டுமா?''

## நான்தான் ஷா!

இங்கிலாந்தின் சுகாதார அமைச்சர் ஒரு மன நோய் மருத்துவ மனைக்கு விஜயம் செய்தார். அந்தச் சமயம், பாட்ரிக் என்ற ஒரு ஆசாமி டிஸ்சார்ஜ் ஆகிப் போய்க் கொண்டிருந்தார். மருத்துவ மனை அதிகாரி அவரைக் கூப்பிட்டார். அமைச்சரிடம், ''இவர் மூன்று வருடங்கள் சிகிச்சை பெற்றுக் குணமடைந்து இன்று டிஸ்சார்ஜ் ஆகிறார்'' என்று கூறிவிட்டு, ''பாட்ரிக், இவர்தான் இங்கிலாந்தின் சுகாதார அமைச்சர்''என்றார்.

பாட்ரிக் உடனே சொன்னார்: ''ஒண்ணும் கவலைப்படாதீங்க. நானும் இங்கே வரும்போது சுரான் அதிபர் ஷா என்றுதான் என்னை எண்ணிக் கொண்டிருந்தேன்!''

## கத்தி என்றால்....

ஒரு பிரெஞ்சுக்காரர், ஒரு ஜெர்மானியர், ஒரு ஆங்கிலேயர் தங்கள் தங்கள் மொழியின் பெருமையைப் பற்றி விவாதித்துக் கொண்டிருந்தார்கள்.

''காதலையும் இயற்கையையும் விவரிக்க பிரெஞ்சு மொழியின் அருகே எதுவும் அண்ட முடியாது'' என்று பிரெஞ்சுக்காரர் கூற—

''தத்துவம், விஞ்ஞானம், தொழில் நுணுக்கம் ஆகியவைகளுக்கு உகந்த மொழி ஜெர்மன் மொழிதான்''என்று ஜெர்மானியர் கூற—

ஆங்கிலேயர் சொன்னார்: ''நீங்கள் சொல்வது எல்லாம் பேத்தல். இதோ பாருங்கள் (ஒரு கத்தியை எடுத்துக் காட்டினார்) இதை பிரஞ்சில் 'அன்கூடோ' என்கிறீர்கள். ஜெர்மன்காரர், ''அய்ன் மெஸர்'' என்கிறார்கள். நாங்கள் ஸிம்பிளாக ''நைஃப்'' என்கிறோம். காரணம், யார் எப்படிச் சொன்னாலும் அது 'நைஃபாக' இருப்பதால்!''

பள்ளிக்கூட வருப்புகளில் பொதுவாக, பதிவு, வருகை என்றுதான் எழுதி வைப்பார்கள். ஆனால் இராமநாதபுர மாவட்டம் கமுதியில் உள்ள க்ஷத்திரிய நாடார் மேல்நிலைப் பள்ளியில் உள்ள வருப்புகளில் பதிவு, வருகை என்பதற்கு நவீனமாக இப்படி எழுதியுள்ளனர்: ''மொட்டு, மலர்'' ''ஏட்டில், எதிரில்'' ''விதைப்பு, விளைவு'' - கமுதி வள்ளி



## ஓடு.....ஓடு

ஒரு பெரிய செல்வந்தர் ஒரு டாக்டரிடம் சென்றார். ''டாக்டர்... நாளுக்கு நாள் மன நிம்மதியை இழந்து வருகிறேன். என்ன செய்வது?'' என்று கேட்டார்.

டாக்டர் சொன்னார்: ''உங்களுக்குத் தேகப்பயிற்சி தேவை. நீங்கள் தினமும் ஐந்து மைல் ஓடுங்கள். உடலும் உள்ளமும் தேறும். இது என்அனுபவபூர்வமானமருந்து''

''ஓ.கே. டாக்டர். நாளையிலிருந்து ஓடுகிறேன்'' என்று சொல்லிவிட்டுப் போன செல்வந்தர், பத்து நாட்கள் கழித்து போன் பண்ணினார்.

''டாக்டர், நீங்கள் சொன்னபடி ஓடிக் கொண்டிருக்கிறேன். மனம் மிகவும் உற்சாகமடைந்துள்ளது'' என்றார்.

''அப்படியா..... இப்போதே இங்கு வாருங்கள். வேறு சில முறைகளைச் சொல்லித் தருகிறேன்'' என்றார் டாக்டர்.

''இப்போதேவா? எப்படி முடியும்? நான் என் வீட்டிலிருந்து 50வது மைலில் அல்லவா இப்போது இருக்கிறேன்!'' என்றார் செல்வந்தர்.

## எரிந்து கொண்டிருந்தது!

இன்ஷூரன்ஸ் கம்பெனிக்கு ஒருவர் போன் செய்தார்.

''என் பெட் ரூம் நேற்று ராத்திரி எரிந்து போய்விட்டது. நஷ்ட ஈடு தருவதற்கு ஏற்பாடு செய்யுங்கள்.''

''நீங்கள் நேற்று இரவு குடித்துவிட்டுப் படுக்கையில் படுத்தபடி சிகரெட் பிடித்து இருப்பீர்கள். தங்கள் கவனக் குறைவால்தான் பெட்ரூமில் தீப்பற்றி இருக்க வேண்டும்'' என்றார் இன்ஷூரன்ஸ் அதிகாரி.

''என்னது? அபாண்டமாகச் சொல்கிறீர்கள். முதலாவது நான் நேற்றுக் குடிக்கவே இல்லை. இரண்டாவது படுக்கை எரிந்து கொண்டிருந்தபோதே நான் படுக்கப் போனேன்.''

## நாலும் கலந்து...

கல்லூரி மாணவர்களுக்கான சிறு கதைப் போட்டி: காதல், இளவரசி, மர்மம், தெய்வம் ஆகியவை இடம் பெறும்படியான சிறுகதை எழுத வேண்டும்.

ஒரு கெட்டிக்கார மாணவன் ஒரே நிமிஷத்தில் எழுதிக் கொண்டு வந்தான். அவன் எழுதியது: ''இளவரசி சொன்னாள், 'அட தெய்வமே, நான் கர்ப்பவதி ஆகிவிட்டேன். யாரால் இருக்கக் கூடும்?''

தொகுப்பு: பி. எஸ். ஆர்.

# சுப நேரங்களில் சில மனிதர்கள்!

ஜே.எஸ்.ராகவன்

மங்கள நாதஸ்வர ஒலியுடன் மாப்பிள்ளை ஊர்வலம் சர்க்கரை க்யூ போல் மெல்ல நகர்ந்து கொண்டு செல்கிறது.

காரின் பின்னே நடந்து வந்து கொண்டிருக்கும் கும்பலில் ஒரு ஜிப்பாவைப் பார்த்துச் சற்று முழிக்கிறது ஒரு வழுக்கைத் தலை.

''நாராயணசாமியா? இங்கே வாடா! ரொம்ப நேரமா உன்னைத் தேடிண்டு இருக்கேன்.''

''அடேடே! பிச்சாமியா? எப்போடா உன்னைக் கடைசியாப் பார்த்தேன்?''

''ஏல். ஐ. சி. சாமா காரியத்தின்போது தான்!''

''சே! என்ன சொல்றே நீ? அதுக்கப்பறம் லக்ஷ்மி பாட்டி தலை தெவசத்திலே உன்னைப் பார்த்தேனேடா?''

''ஆமாம். மறந்தே போச்சு. வயசு ஆகிறது இல்லையா? எப்படி இருக்கான் உன் மச்சினன்?''

''பொட்னு போயிட்டாண்டா! போன மாசம். பம்ப்லே தண்ணி அடிக்கும்போது மாரை வலிக்கிறதுன்னான். டாக்டர் வரதுக்கு முன்னே ஆள் க்ளோஸ்!''

''அட கண்றாவியே. அவன் பொண்ணுகூட ஒண்ணு....''

''ஆமாண்டா. வயத்தெரிச்சல். கல்யாணம் ஆன நாலாம் நாள்... வீணாப் போயிடுத்து. ஸ்கூட்டர்லே போறானாம் அந்தப் பையன். எதிர்லே பெட்ரோல் டாங்கர். அந்த ஹெல்மெட் எழவைப் போட்டுண்டு போயிருந்தா அந்தக்கொழந்தை கழுத்திலே இப்போ மஞ்சக் கயிறு தொங்கிண்டு இருந்திருக்கும். ஹூம்....''

''வயத்தை என்னமோ செய்யறதுடா...''

''எப்படி இருக்கார் உன் மாமனார்?''

''அவரைப் பார்க்கணும்னா நீ ஜி. எச். போகணும். இப்போ அப்போன்னு இழுத்துண்டு இருக்கு. எல்லாருக்கும் தந்தி கொடுத்தாச்சு. என்னென்ன விதமா வியாதி எல்லாம் இப்போ வரதுங்கறே... ஆமா.. உன்பொண் வயத்துப் பேரன் கூட திடீர்னு தவறிப் போச்சாமே. சின்னான் சொன்னான்....''

''ஆமாண்டா. அவனை எங்கே பார்த்தே?''

''ராயபுரம் சாவடியிலே. நம்ம கிட்டா இருக்கானே... இருந்தானேன்னு சொல்லணும். அதாண்டா நன்னிலம் கிட்டா! அவன் பத்தாவது நாள் காரியத்துக்குப் போயிருந்தேன். அங்கே சொன்னான். திடீர்னு கொழந்தைக்கு என்ன வந்தது?''

''அது பெரிய கஷ்டம்டா! ஏதோ குச்சி ஐஸ் சாப்பிட்டதாம். உடனே வாந்தி. பேதி. ஜுரம். சில்ரன் ஆஸ்பத்திரியிலே அட்மிட் பண்ணணும்னு டாக்டர் கந்தசாமி சொன்னார். ஒரே ராத்திரியிலே போயிடுத்துடா. அன்னிக்கு மாத்திரம் நாலு குழந்தைகள் அந்த வார்டிலே பொட்டுப் பொட்டுன்னு பிராணனை விட்டுடுத்து.''

''ச்ச்ச்ச... தேத்திக்கோ. கொழந்தைகளுக்கு ஐஸ்கிரீம் வாங்கிக் கொடுக்கவே கூடாது. ஆமாம். அடுத்த மாசம் சின்ன அம்பி கல்யாணத்துக்கு வருவியா?''



''பிப்ரவரி ஏழாம் தேதிதானே? வந்து கூப்பிட்டான். ஆனா அன்னிக்கு என் அப்பா தெவசம். வர முடியாது. இந்தக் கல்யாணத்துக்கே வரலாமா, கூடாதான்னு சங்கடப்பட்டுக் கடைசியா வந்து சேர்ந்தேன். பாரேன், என் ஹௌஸ் ஓனர் மாடிலே இருக்காரே உனக்குத் தெரியுமா? இன்னிக்குக் கார்த்தாலே....''

''போய்ட்டாரா?''

''அவர் இல்லேடா. அவர் சம்சாரம். பழுத்த சுமங்கலி. ரொம்ப நாளா 'உங்களுக்கு முன்னே நான் மஞ்சளும் பூவுமா போயிடணும்னு சொல்லிண்டு இருந்தாள்! இன்னிக்கு எட்டு மணிக்கு தேங்காய் தொகையல் அரைக்கும்போது டீயர்னு இரண்டு கையையும் கூப்பிண்டு 'சுவாமி கூப்பிடறார்னு சொன்னா' அவ்வளவுதான். மயானம் போயிட்டுக் குளிச்சுட்டு நேர வரேன்.''

கெட்டி மேளச் சத்தத்துடன் காரிலிருந்து மாப்பிள்ளை இறங்குகிறார். கும்பலில் ஓடி வந்த ஒரு சிறு பையன் 'வழுக்கை' மேல் மோதுகிறான்.

''ஐயோ தாத்தா இவனைப் பாருங்கள். என்னை அடிக்கிறான்.''

''சீ! கல்யாணத்திலே ஐயோன்னு சொல்லக்கூடாதுன்னு எத்தனை தடவை சொல்றது. இதுகூடத் தெரியாது....இடியட்!'' பட்டென்று முதுகில் வைக்கிறார்.

ஆமோதித்து ஜிப்பா தலையை ஆட்டுகிறது.

# கராத்தே பயிற்சி 24

பயிற்சியாளர் : டோனி பொன்னையா

தயாரிப்பு : குண்டுமணி

சித்திரம்: [signature]

## நிழல் சண்டை













1. தயார் நிலை
2. இடதுபுறம் திரும்பி இடக்கையால் தடுத்தல்
3. வலது கால் முன் வைத்து வலது கையால் குத்துதல்
4. வலது காலை இடதுபுறம் திருப்பி வலது கையால் தடுத்தல்
5. இடது காலை முன் வைத்து இடது கையால் குத்துதல்
6. இடது காலை முன் வைத்து இடது கையால் தடுத்தல்
7. வலது காலை முன் வைத்து வலது கையால் குத்துதல்











# கடுகு பதில்கள்

✖ அ. குமார், பங்களூர்-5
கே. துப்பறியும் சாம்புவிற்கும் கடுகிற்கும் உள்ள ஆறு வித்தியாசங்கள் என்னென்ன?

ப: கெட்டிக்காரத்தனம், சாமர்த்தியம், வள்ளல் தன்மை, அபார அழகு, உலகப் புகழ், அஞ்சா நெஞ்சம் ஆகியவை! (யாருக்கு இவை பொருந்தும் என்று மட்டும் என்னைக் கேட்காதீர்கள்!)

டாக்டர் வி. ஜெகன்னாதன், செம்பூர் (பம்பாய்)
கே: எல்லா பத்திரிகைகளையும் வாங்கி எல்லா கதை, கட்டுரைகளையும் படிக்க வேண்டும் என்ற பிடிவாதம் எனக்கு. குறுகிய நேரத்தில் யாவற்றையும் படிக்க முடியாததால் வீடு முழுவதும் பத்திரிகைகள் சேர்ந்துவிடுவதால் மனைவிக்கும் எனக்கும் அடிக்கடி கருத்து வேறுபாடு ஏற்படுகிறது: இதற்கு என்ன செய்வது?

ப: மிஸஸ் ஜகன்னாதன், உங்க வீட்டுக்காரருடன் ஏனம்மா சண்டை போடுகிறீர்கள்? படித்துவிட்டுப் போகட்டும். தினமும் மூன்று வேளை கடுகு பதில்களையும் கூடவே படித்துக் கொண்டு வந்தால் அவருடைய பத்திரிகைப் பித்தத்தினால் ஏற்படும் கோளாறுகள் நீங்கிவிடும். இது அனுபவ மருந்து.

✖ என். சேதுராமன் கொடுமுடி
கே: வசதி படைத்த குடும்பப் பெண்மணி கூட சல்லடை இரவல் வாங்குகிறார்களே?

ப: சில பொருள்களைச் சொந்தமாக வாங்கப் பலருக்கு மனசு வராது. சல்லடை, நியூஸ் பேப்பர், மூக்குப் பொடி, தர்மா மீட்டர், துருவா மணை, ஒட்டடைக் கம்பு இப்படிப் பல.

✖ மல்லிகா சண்முகம், கல்கத்தா 29
கே: எந்த பொருள் வியாபாரம் செய்தால் நிறைய வருவாய் கிடைக்கும்?

ப: செய்கிறபடி செய்தால் எந்த வியாபாரமும் சிறப்பான பலனைத் தரும். வைர வியாபாரம் செய்தால் அதிக லாபம்; கடுகு வியாபாரம் செய்தால் குறைந்த லாபம் என்பதில்லை. உங்கள் ஊர்ப் பக்கத்தில் பங்களாதேஷ் எல்லைக்கு அருகில் உள்ள பங்காவ் என்ற சின்னக் கிராமத்தில் சீப்பு செய்கிறார்கள். ஊரே இந்தத் தயாரிப்பில் ஈடுபட்டிருப்பதைப் பார்த்திருக்கிறேன்' எக்கச் சக்கமான பணம் குவிகிறது. சாதாரண சீப்பு வியாபாரத்தில்.

✖ எஸ். ரங்கநாதன், பங்களூர்38
கே: கலப்புமணம் செய்து கொள்பவர்களுக்குத் தங்கப்பதக்கம் என்று அறிவிக்கிறது அரசு. ஆனால் அந்த அரசில் உள்ள மந்திரிகள் தங்கள் குடும்பத்தில் இப்படி திருமணம் செய்வித்து தங்கப்பதக்கம் பெற்றிருக்கிறார்களா?

ப: அப்படிச் செய்தால் தாங்கள் தங்கப் பதக்கம் பெறுவதற்காகவே இப்படி ஒரு திட்டத்தைக் கொண்டு வந்தார்கள் என்று நீங்கள் குற்றம் சாட்டக் கூடும். அதனால் அவர்கள் அந்த வழிக்கே போகாமல் இருக்கிறார்கள். நேர்மை, ஸ்வாமி, நேர்மை!

✖ எஸ். பாலசுப்ரமணியன், கீழ் புவனகிரி
கே: ஏன் கடுகு என்ன கேள்வி கேட்டாலும் பதில் வருவதில்லை. என் நண்பன் கேலி செய்கிறான். விரக்தி மேலோங்கி நிற்கிறது. சாவுக்குருக்கு வழி தேடிக் கொண்டிருக்கிறேன்.

ப: பாலு, பாலு, அப்படியெல்லாம் செய்து விடாதீர்கள். ஒரு விஷயம் தெரியுமா? பதில் சொல்லிப் பலரின் உயிரைவாங்குவதாக ஒரு குற்றச்சாட்டு என் மேல் உள்ளது. பதில் சொல்லாத போதும் உயிரை வாங்குகிறான் என்ற பழி என் மேல் விழவேண்டுமா?

✖ ச. எல். ஸ்ரீதரன், திருநின்றவூர்
கே: கண்ணதாசன் தன் சுயசரிதத்தில் தம்மை ஏன் மூன்றாம் மனிதராக வைத்து எழுதுகிறார்?

ப: அரசியல்வாதி, எழுத்தாளர், கவிஞர் என்ற மூன்று பேர்கள் கண்ணதாசனுக்குள் அடங்கியிருப்பதாலோ என்னவோ!

✖ மோ. ஜ. இரத்தினசாமி, மோனூர்
கே: ஒரு சினிமா பாடலில் ஆறேழு வயதில் அம்புலியாய் பார்த்த நிலா என்று வருகிறது. அம்புலி என்றாலும் நிலா தானே?

ப: சினிமாப் பாட்டுக்கு நோட்ஸ் போட்டால் நன்றாக விற்பனையாகும் போலிருக்கிறதே! சினிமாப் பாடல்கள் இலக்கியங்கள் இல்லை; அபத்தங்கள் இருக்கும். மண்டையைக் குழப்பிக் கொள்ளாதீர்கள்.

✖ எஸ். முருக மோகன், ஆதிவராக நத்தம்
கே: ஆயகலைகள் 64 என்கிறார்களே, என்னென்ன?

ப: என்னை என்ன கி. வா. ஜ. என்று நினைத்து விட்டீர்களா? 'விடையவன் விடைகள்' என்ற கி. வா. ஜ. நூலில் இதற்கு விடை இருக்கிறது. வாங்கிப் படித்துக் கொள்ளுங்கள். இந்தப் புத்தகத்தில் நிறையப் பயனுள்ள, சுவையுள்ள விஷயங்களும் உள்ளன.

✖ எம். ராஜேந்திரன் லால்குடி.
கே: சிறந்த கவிதை எது?

ப: குறைந்த வார்த்தைகளில் நிறையச் சிந்தனை அலைகளைத் தூண்டிவிடும் கவிதை. கவிதை உணர்வினால் மட்டும் உந்தப்பட்டு எழுதப்பட்டிருக்க வேண்டும். கவிஞனின் மனப் பாதிப்பின் அளவை விடப் படிப்பவரின் மனத்தில் ஏற்படும் பாதிப்பின் அளவைக் கொண்டுதான் சிறந்த கவிதையைக் கணிக்க முடியும். கவிதைகள் இலக்கணங்களுடன் அமைய வேண்டும் என்பதில்லை உணர்ச்சிகளுடன் ஒளிரவேண்டும்.

பரிசு பெறுவர்:

எம். ராஜேந்திரன்,
23 ஓமக் குளத்தெரு,
லால்குடி.



பார்வையாளர்களில்
ஒரு பகுதி

# பாரதப் பெண்களின் அரசியல் எதிர்காலம்..?

உருமு தனலக்ஷ்மி கல்லூரி. திருச்சியிலிருந்து சுமார் பத்து கிலோமீட்டர் தூரத்தில் அமைந்துள்ள இக் கல்லூரி திருச்சியிலே உள்ள ஒரே ஒரு 'கோ-எஜுகேஷன்' கல்லூரியாகும். இக் கல்லூரியில் சுமார் 100 பெண்கள் படிக்கின்றனர். இம் மாணவிகளுக்காக இக் கல்லூரியில் ஒரு பேச்சுப்போட்டியை 'கல்கி' நிகழ்த்தியது. 'பாரதப் பெண்களின் அரசியல் எதிர்காலம்' எனும் தலைப்பில் ஏழு மாணவியர் பேசினர்.

ஒருவருக்கொருவர் சளைத்தவரில்லை என்பது போல் பங்கு பெற்ற மாணவியரான ஜி. தனலக்ஷ்மி கே. சாந்தி, எஸ். அன்னலக்ஷ்மி, ஜி. புவனா, ஈ. சஹாயமேரி, ஏ. பாக்கிய செல்வி, எம். ஜெயலக்ஷ்மி ஆகிய எழுவரும் வெகு சிறப்பாக உரையாற்றினர்.

கல்லூரியின் பேராசிரியரான திரு ப. ரங்கராஜன் தலைமை தாங்கினார். திரு ரங்கராஜனுடன், திருமதி பூமா வெங்கடரமணியும், 'கல்கி' நிருபரும் இணைந்து நடுவர் குழுவாகச் செயலாற்றினர். பேச்சாற்றல், கருத்து வளம் போன்ற பல அம்சங்களை மனத்தில் கொண்டு பேச்சாளர்களின் தரம் பரிசீலிக்கப்பட்டது.

இரண்டாம் ஆண்டு பௌதிக மாணவியான குமாரி எம். ஜெயலக்ஷ்மி மிக அதிக மதிப்பெண் பெற்றுப் போட்டியில் வென்றார். கல்கியின் சார்பாக ரூ 50 பரிசு பெற்றார். இதனை திரு ஏ. ரங்கராஜன் வழங்கினார். தவிர, பங்கேற்ற எல்லா மாணவிகளுக்கும் புத்தகங்கள் பரிசாக அளிக்கப்பட்டன. இப்போட்டி சிறப்பாக அமைய ஒத்துழைத்த உதவிப் பேராசிரியர்கள்: திரு கே. சேகர், குமாரி தேவகி கோபாலன்.

வெற்றி பெற்ற குமாரி எம். ஜெயலக்ஷ்மியின் சொற்பொழிவிலிருந்து சில சுவையான கருத்துக்களைத் தொகுத்து அளித்துள்ளோம்.

'பாரதப் பெண்களின் அரசியல் எதிர்காலம்' என்று தலைப்புக் கொடுக்கப்பட்டுள்ளது. இதற்குப் பதிலாக 'பாரத ஆண்களின் அரசியல் எதிர்காலம்' என்று ஏன் கொடுக்கவில்லை என்ற கேள்வி பிறக்கிறது. இதிலிருந்தே பெண்கள், சமுதாயத்தில் இன்னமும் இரண்டாந்தரப் பிரஜையாக நடத்தப்படுவது தெளிவாகிறது அல்லவா?

அதியமான் காலத்திலேயே ஔவையார் அரசியலில் ஈடுபட்டு நிகழவிருந்த பெரும் போரைத் தவிர்த்த நிகழ்ச்சியை நாம் அறிவோம். இதிலிருந்து பாரதப் பெண்களுக்கு அரசியல் ஈடுபாடு என்பது புதிதான ஒன்று அல்ல என்பது தெளிவாகிறது.

தற்கால சூழ்நிலையில் தமக்குக் கிடைக்கும் குறைவான வாய்ப்பை மிகவும் சிறப்பாகப் பயன்படுத்திக் கொண்டு பெண்கள் தங்களையும் உயர்த்திக் கொண்டு நாட்டுக்கும் சேவை செய்து வருகின்றனர்.

அன்னி பெசன்ட் அம்மையார், சரோஜினி நாயுடு, விஜயலட்சுமி பண்டிட், ஜான்ஸியின் ராணியான லட்சுமி பாய் முதற்கொண்டு பல்லாயிரம் பெண்கள் நேரடியாகவும் மறைமுகமாகவும் நமது சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டு, நாடு சுதந்திரம் அடைய சேவை செய்தனர். தற்போதும் பிரதமர் இந்திரா காந்தி உட்படப் பல பெண்கள் அரசியலில் ஈடுபட்டுத்தான் உள்ளனர். ஆனாலும் பாரதப் பெண்களின் அரசியல் எதிர்காலம் குறித்து ஒரு கேள்விக் குறி தோன்றியுள்ளது என்றால் அதன் அடிப்படைக் காரணம் பாரத அரசியலில் இன்று புற்று நோயாய் வியாபித்துக் கிடக்கும் பல அவலங்கள்தான்.

போதாக் குறைக்குப் பெண்களால் இதைத்தான் செய்யமுடியும்! இதெல்லாம் பெண்கள் திறனுக்கு அப்பாற்பட்டவை; இத்துறைகள் ஆண்களுக்கு மட்டுமேதான்! போன்ற பழமைவாதங்களும் குறுகிய கண்ணோட்டங்களும் இன்னும் நமது சமுதாயத்தில் வேரூன்றிக் கிடக்கின்றது.

நாட்டு நிர்வாகத்தில் ஈடுபடும் பெண்ணுக்கு, குடும்ப நிர்வாகத்தில் ஒத்துழைப்பு கிட்டுவதில்லை. 'குடும்பம் என்பது ஆணுக்கும்

விழா நிர்வாகிகளும்
பங்கேற்ற மாணவியரும்

பெண்ணுக்கும் சமமானது. இருவரும் சம பங்கு போட்டுக்கொண்டு நடத்தியாக வேண்டிய கடமை இல்லறம்' எனும் நோக்கு பெரும்பாலான ஆண்களிடம் இன்னமும் தோன்றவில்லை. அடுத்தபடியாக நம் நாட்டு அரசியல் அரங்குக்கு வருவோம்!

இன்றைய அரசியல் துறையில் முன்னேறித் தலைவராக ஆக வேண்டுமென்றால் அதற்குத் தேவையான ஒரே தகுதி பணம் தான். எவன் கொழுத்த பணக்காரனோ, எவன் பணத்தைக் கணக்குப் பாராமல் தண்ணீராகச் செலவழிக்கத் தயாராக உள்ளானோ அவனே இன்றைய பாரத அரசியலில் தலையெடுக்க முடியும் எனகிற இழி நிலைக்கு பாரதம் வந்து விட்டது. பாரத அரசியலில் பெண்கள் போதிய அளவு முன்னேற முடியாததற்கு இதுவும் முக்கிய காரணமாகும்.

அரசியல் என்று வந்து விட்டால் பரிபூரண கருத்துச் சுதந்திரமும், எண்ணங்களைத் துளியும் பயமின்றி வெளிப்படுத்தக் கூடிய சுதந்திரச் சூழ்நிலையும்அவசியம். ஆனால்—

அரசியலில் ஈடுபடும் பெண்கள் மட்டுமின்றி எந்தப் பெண்ணுனுமே தங்களது எண்ணங்களை எவ்வித அச்சமுமின்றி நமது சமுதாயத்தில் வெளியிட முடிகிறதா?

புரட்சிகரமான கருத்தை ஒரு பெண் தைரியமாக வெளியிட்டால் அவளையே சந்தேகக் கண்ணோடு நோக்கும் இழிநிலையில் இருக்கிறது நமது சமுதாயம்.

'தாங்கள் சராசரி மனிதர்கள்... தங்களது சிறு தவறுகள் மன்னிக்கப்பட வேண்டியவை' என்று வாதிடும் ஆண்களே, அதே தவறை ஒரு பெண் செய்து விட்டால் அதனை பூதக் கண்ணாடியில் பெரிதுபடுத்தி அப்பெண் பழி வாங்கப்பட வேண்டியவள் என்பதை நிலை நாட்டுவதில் தீவிரமாக ஈடுபடுகின்றனர்!

சமீபத்தில் சிறந்த நாவலாசிரியைகளாகிய இந்துமதியும், சிவசங்கரியும் ஒரு வார இதழில் எழுதிய தொடர் கதையில் ஒரு பெண்ணின் பலவீனங்களை வெளிச்சம் போட்டு யதார்த்தமாய் எழுதியிருந்தனர். இக்கதை பற்றிக் கடுமையாக விமர்சித்த ஆண்கள், 'இரண்டு இழிந்த குலப் பெண்கள் சேர்ந்து எழுதின இழிவான கதை' என்று கதாசிரியைகளையே அநீதியான விதத்தில் பழித்து எழுதினர்.

இது ஒன்றே போதும் ஆண்கள் பெண்களை எப்படிமதிப்பிடுகின்றனர்என்பதற்குச்சான்று.

அரசியலில் ஈடுபடவும், உழைக்கவும், சிறப்பாக முன்னேறவும் வேண்டிய எல்லாத் திறமைகளும், தகுதிகளும் பாரதப் பெண்களிடம் தேவைக்கு அதிகமாகவே உள்ளன.

அரசியலில் ஈடுபட வேண்டும் என்கிற ஆர்வமும் துடிப்பும் அவர்களிடம் இல்லாமல் போகவில்லை!

ஆண் சமுதாயத்தின் நோக்கும் போக்கும் தான் பெண்களைப் பெருத்த அளவில் அரசியலில் ஈடுபட முடியாதபடி தடுக்கிறது.

இதே நேரத்தில்,

வளர்ந்து வரும் இளைய சமுதாயத்தினரில் பெரும்பாலோரின் நோக்கு சற்று விரிவடைந்து வருகிறது என்பதையும் நாம் காண்கிறோம். மாறிவரும் இம்மனோபாவத்தை நோக்கும்போது பாரதப் பெண்களின் அரசியல் எதிர்காலம் சிறப்பாக இருக்கும் என்றே தோன்றுகிறது. சிறப்பாயிருக்க வேண்டும் என்று உள்ளம் விரும்பவும் செய்கிறது!

தொகுப்பு: நாயகன்
புகைப்படங்கள்: மன்னை மூர்த்தி

குமாரி எம். ஜெயலக்ஷ்மி பரிசு பெறுகிறார்



லக்ஷ்மி

# கழுத்தில் விழுந்த மாலை

## 5

அருகில் வந்து கஸ்தூரி தன் தோளைத் தொட்டதும் அவள் மார்பின் மீது தன் முகத்தைப் பதித்துக் கொண்டு மாதங்கி தாங்க முடியாத துயரத்தில் குலுங்கிவிட்டாள்.

''அத்தை! நான் என்ன தப்புச் செய்தேன் என்னை ஏன் கோவிக்கணும்?'' விம்மல்களுக்கிடையே திணறினாள்.

கஸ்தூரி நடந்த விவகாரத்தை உடனடியாக விவரமாகத் தெரிந்துகொள்ள விரும்பவில்லை.

இந்த அசம்பாவிதமான நிலைமையை மேற்கொண்டு எப்படிச் சமாளிக்கப் போகிறோம் என்பதுதான் அவளது அடுத்த கவலை.

''அழாதே மாதங்கி! முகத்தைக் கழுவிக்கோ...இதோ வந்துட்டேன்.'' சொல்லிக் கொண்டே அவள் கீழே இறங்கிச் சென்றாள்.

அன்று வேதாசலம் தமது மனைவியுடன் இரவு பஸ்ஸுக்கு ஊருக்குத் திரும்ப ஆயத்தமாகிக் கொண்டிருந்தார்.

அவர் போன பின்பு வீட்டில் அவளும் மாதங்கியும் மட்டுமே இருப்பார்கள்.

நுங்கம்பாக்கத்தில் அவளது மாமனார் ஒரு பெரிய வக்கீலாக வாழ்ந்த காலத்தில் காலேஜ் அவென்யூவில் வாங்கிப் போட்டு விட்டுப் போயிருந்த வீடு அது. உயரமான சுற்றுச் சுவர்களுக்குள் வேப்ப மரங்கள் சூழ உள்ளே எங்கேயோ ஒளிந்து கொண்டுவிட்டது போன்றதொரு பழைய காலத்து வீடு. அடுத்தடுத்து உருவாகியிருந்த புதிய மாடல் பங்களாவாசிகள், உயர் மட்டத்தைச் சேர்ந்தவர்கள் — அவர்களால் அவளுக்குத் தொல்லைகள் கிடையாது. — தப்பித் தவறிக்கூட அடுத்த பங்களாவின் பையன் வீசிய பந்து அவர்கள் தோட்டத்துக்குள் விழுந்ததில்லை. அப்படிப்பட்டதொரு தனித் தன்மை வாய்ந்த அண்டை அயலார் வசித்த பகுதி அது.

கம்பெனி காரியமாக ஹர்ஷன் அடிக்கடி வெளியில் போக நேர்ந்தது. அந்தச் சமயங்களில் வீட்டு நாய் தோட்டத்தில் காவல் காக்க வேலைக்காரியுடன் அவள் மாடி அறையில் உறங்கும்போது அவளுக்கு மிகவும் பயமாக இருக்கும்.

அடித்துப் போட்டாலும் கேட்பாரில்லாது இதென்ன தனிமை? என்று சலித்துக்கொள்வதுண்டு.

பழுதாகிவிட்ட பாகங்களைச் சீர்திருத்தியும் சோபா, கட்டில், புத்தக அலமாரி என்று பல பொருள்களை வாங்கிப் போட்டும் வீட்டை மகன் அலங்கரித்ததை அவள் விரும்பவில்லை. அந்த வீட்டை விற்றுவிட்டு, ஜனப் புழக்கம் அதிகமானதொரு பகுதியில் ஒரு சிறிய ஃப்ளாட்டில் குடியேறி வாழ அவள் பெரிதும் ஆசைப்பட்டுக் கொண்டிருந்தாள். வேதாசலம், மனைவி, இருவரும் புறப்பட்டுப் போன பின்னர் கதவை அடைத்துக் கொண்டு உள்ளே வந்தாள். இருட்டத் தொடங்கிவிட்ட பின்னர், ஆள் அரவம் அடங்கிப்போகும் அந்தப் பகுதி இப்பொழுது ஓர் ஆழ்ந்த அமைதியில் மூழ்கிக் கிடந்தது. கல்யாணத்துக்கு வந்திருந்த உறவினர் கூட்டத்தால் கலகலத்த வீடு 'ஹோ' என்ற நிசப்தத்தில் மூழ்கிக் கிடந்தது. தோட்டத்துக்குள்ளே ரோவர் மூச்சிரைக்க இங்குமங்கும் ஓடும் சப்தம் துல்லியமாகக் கேட்டது.

அந்தத் தனிமையையும் அமைதியையும் இப்பொழுது கஸ்தூரி மிகவும் வரவேற்றாள்.

மனைவியைத் தனியே விட்டு விட்டு அவள் மகன் ஊருக்குப் போனதின் மர்மம் என்ன?

அக்கம் பக்கத்தவர்களில் யாரும் அதைப் பற்றி அக்கறை காட்ட மாட்டார்கள் நிச்சயம்.

வேலைக்காரிக்குக் கொஞ்சம் சந்தேகம் ஏற்படக் கூடும். ''அவசரமாகக் கம்பெனி அனுப்பி வைச்சுட்டது. என்ன செய்கிறது. வயிற்றுப் பிழைப்பு'' என்று சமாளித்துவிட முடியும்.

ஆனால் அவள் தலைவியாக விளங்கும் அந்த மாதர் சங்கத்து உறுப்பினர் ,அவளை லேசில் விடமாட்டார்களே? தனக்குத் தலைவி பதவி கிடைக்கவில்லை என்று காரமாக இருக்கும் காமாட்சி ஒருத்தியே போதும்.

அடுத்த நாளே அவள் கல்யாணத்துக்கு வரமுடியாது நின்றுவிட்ட அங்கத்தினர்களுடன் வீட்டுக்கே விசாரிக்க வந்துவிடுவாள். கூண்டில் நிறுத்தி வைத்துக் குறுக்கு விசாரணை செய்வது போல் கேள்வி மேல் கேள்விகளாக எழுப்பித் துளைத்து விடுவாள்.

'தேன் நிலவுக்கு மனைவியைக் கூட்டிச் செல்லாமல் கம்பெனி காரியமாகவா ஹர்ஷன் போயிருக்கான்? நம்ப முடியாத சங்கதி... இதில் என்னவோ இருக்கு.'

'ஆமாம்! கல்யாணப் பத்திரிகையில் பெண்ணின் பெயர் வேறு என்னவோ போட்டிருந்தது. மாதங்கி என்று பார்த்தது நினைவில்லையே?'

உண்மையைக் கக்கும்வரை அவள் குத்திக் குதறிவிடுவாள். கல்யாணத்துக்கு வந்திருந்த சில உறுப்பினர்கள் விஷயத்தை இதற்குள் பல திசைகளிலும் பரிமாறி விட்டிருப்பார்கள்.

'செய்தி தெரியுமா?... ஹர்ஷனை வேண்டாம்னு உதறிட்டு அந்தப் பெண் கல்யாணத்துக்கு முதல் நாளே மண்டபத்திலிருந்து மறைஞ்சுட்டா. யாருக்கும் தெரியாம விஷயத்தை அமுக்கிச் சட்டுன்னு வேறே ஒரு பெண்ணை வைச்சுக் கல்யாணத்தை முடிச்சுட்டாள் கஸ்தூரி... அம்மாவுக்கும் பிள்ளைக்கும் இந்த ஆள் மாறாட்ட விவகாரத்திலே மனஸ்தாபமாம்.'

'ஆனாலும் கஸ்தூரி தன் மகனை இப்படி வற்புறுத்தி யிருக்கக் கூடாது. மேடையிலே பேசறது ஒண்ணு தன் வீட்டுக்குன்னு வந்தால் நடந்துக்கிறது வேறே....'

பலவாறு சங்கத்து அங்கத்தினர்கள் அவளது வீட்டு விவகாரத்தைக் கிசுகிசுப்பார்கள்.

அடிவயிற்றில் சில்லென்ற உணர்வு வேதனையாகச் சுருட்டிக் கொண்டது.

சமையலறைக்குச் சென்று கொஞ்சம் பாலைச் சூடாக்கி டம்ளரில் நிறைத்து எடுத்துக் கொண்டாள். விளக்குகளை அணைத்து விட்டு மேல் மாடிப் பக்கம் வந்தாள்.

மாதங்கி ஒரு வழியாக அழுது முடித்து விட்டு, முகத்தைக்கழுவிப் பொட்டிட்டுக் கலைந்த முடியைத் வாரிச் சரி செய்து கொண்டு விட்டிருந்தாள்.

வெகு நேரம் அழுததன் விளைவு முகம் உப்பிக் கண்கள் சிவந்து இடுங்கி விட்டிருந்தன.

கஸ்தூரிக்கு அவளைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது.

''இந்தப் பாலைச் சாப்பிடு. முதல் முதலாக இந்த வீட்டுக்குள் வந்திருக்கே. பட்டினியாகப் படுக்கக் கூடாது.'' — உபசரித்தாள்.

அடிவாங்கி அழுது சோர்ந்துவிட்ட குழந்தையைப் போல ஒடுங்கி நின்ற மாதங்கி மாமியார் கட்டளையை மறுக்கவில்லை.

அறையின் கதவைத் தாளிட்டுவிட்டுப் படுக்கையின் ஓரத்தில் வந்து உட்கார்ந்து கொண்டாள் கஸ்தூரி.

விடி விளக்கின் ஒளியில் மருமகளை உற்றுப் பார்த்தாள்.

''ஹர்ஷன் என்ன சொல்லிவிட்டுப் போனான்?'' துணிவுடன் மெள்ளக் கேட்டாள்.

''அம்மாவுக்கு அவமானம் ஏற்படக் கூடாதே என்ற ஆதங்கத்தில் ஒப்புக்கொண்டேன். அதனாலே இந்தக் கல்யாணத்தினாலே நீ என் மனைவியாகி விட்டதாக மனப்பால் குடிக்காதேன்னார்...'' தழுதழுத்தாள் மாதங்கி.

''அப்படியா சொன்னான் அந்த முட்டாள்? அவன் கிடக்கிறான்.''

''அவர் வருவதற்குள் நான் பெரியப்பா வீட்டுக்குப் போய்விடணுமாம். இல்லாட்டா ரொம்பக் கஷ்டப்படுவேனாம்...அவமானப் படுவேனாம்.''

''பயமுறுத்துகிறானா? அதையும் பார்த்து விடலாமே?'' கோபத்துடன் உதட்டைக் கடித்துக் கொண்டாள் கஸ்தூரி.

''பெரியப்பா வீட்டில் இனி எனக்கு வரவேற்புக் கிடைக்காது. பெத்தவங்களும் பிறந்தவங்களும் இல்லாத அனாதை நான். இப்போ எங்கே போவேன்? எனக்குப் பயமா இருக்கு.'' கதறினாள் மாதங்கி.

''இனி இது உன் வீடு. உன்னை இங்கிருந்து போகச் சொல்ல யாருக்கும் உரிமை கிடையாது. உன் பெரியப்பா வீட்டுக்கு நீ அனாவசியமாகப் போகத் தேவையில்லை.... மாதங்கி, அழுகையை நிறுத்தி விட்டு நான்



# 500 மலர்களைக் கொய்யுங்கள்!

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 21 | 54 | 46 | 51 | 83 | 71 | 65 | 85 | 52 | 81 |
| 31 | 24 | 43 | 28 | 72 | 23 | 92 | 35 | 44 | 2 |
| 62 | 11 | 73 | 34 | 51 | 2 | 21 | 63 | 45 | 32 |
| 61 | 51 | 4 | 22 | 1 | 33 | 71 | 27 | 21 | 55 |
| 31 | 65 | 74 | 46 | 36 | 82 | 26 | 53 | 23 | 4 |
| 5 | 81 | 31 | 43 | 54 | 64 | 3 | 72 | 25 | 2 |
| 91 | 85 | 1 | 24 | 46 | 71 | 35 | 21 | 84 | 63 |
| 21 | 47 | 32 | 23 | 42 | 35 | 93 | 2 | 45 | 41 |
| 61 | 45 | 51 | 4 | 65 | 27 | 35 | 73 | 4 | 92 |
| 71 | 2 | 46 | 24 | 44 | 66 | 31 | 52 | 91 | 23 |

மேலே காணப்படும் 100 கட்டங்களையும் 100 பூந்தொட்டிகளாகக் கற்பனை செய்து கொள்ளுங்கள். ஒவ்வொரு பூந்தொட்டியிலும் அதில் குறிப்பிட்டுள்ள எண்ணின் அளவிற்கு மலர்கள் உள்ளன. நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் : 10 பூந்தொட்டிகளில் மட்டுமே கை வைத்து அவற்றிலுள்ள அனைத்து மலர்களையும் கொய்ய வேண்டும். மலர்களின் எண்ணிக்கை மிகச் சரியாக 500 என வரவேண்டும். ம்... முயன்று பாருங்கள்!

— எஸ். பாலகிருஷ்ணன்.

விடை : 5, 11, 28, 36, 47, 55, 66, 74, 85, 93

---

சொல்லப் போவதைக் கவனமாகக் கேள். இந்த மனஸ்தாபத்தைப் பத்தி வெளியிலே யாருக்கும் தெரிய வேண்டாம். ஹர்ஷன் கொஞ்சம் முன்கோபி. அவ்வளவுதான். சீக்கிரம் மனம் மாறிப் போய்விடுவான். கவலைப்படாதே. அதுவரை உன் மனத்தைத் தளர விடாம வச்சுக்கோ. உன் கவனத்தை வேறு விஷயங்களில் திருப்பிக்கோ. இந்த வீட்டில் நீ கவனிச்சுக்கொள்ள வேலை நிறைய இருக்கு. நானைக் காலையிலிருந்து நான் வேலைக்குப் போகணும். உன்னோட கூடத் துணையா வீட்டு வேலைக்காரி நான்வரும்வரை இருப்பாள். ரோவர் கிட்டப் பழகிட்டா உன் பின்னாலேயே நிழலாகச் சுத்திக்கொண்டு காவல் காத்துக் கொண்டிருக்கும். இந்த வீட்டு நிர்வாகம் முழுவதும் இனி உன்னுடையது. இந்தா பிடி வீட்டுச் சாவியை. பத்திரமா வச்சுக்கோ.''

தன் இடுப்பில் வெள்ளி வளையத்தில் குலுங்கிக் கொண்டிருந்த சாவிக் கொத்தை உருவி மருமகள் கையில் வைத்தாள் கஸ்தூரி.

''சரி, நீ ரொம்பக் களைச்சுப் போயிருப்பே. படுத்துக்கோ.'' உபசரித்துவிட்டுப் படுக்கையின் மீது—தானும் ஒரு பக்கம் சாய்ந்து கொண்டாள்.

சில நாட்களாக எல்லாவற்றையும் தானே ஓடியாடிக் கவனித்ததன் அயர்ச்சி. அவளையுமறியாமல் உறங்கிப் போனாள் கஸ்தூரி.

திடுக்கிட்டு விழித்துக் கொண்டபோது பொழுது நன்றாக விடிந்து விட்டிருந்தது. அருகில் மாதங்கியைப் படுக்கையில் காணவில்லை. கீழே சமையலறையில் பாத்திரங்களின் ஓசை மெலிதாகக் கேட்டது. பல் துலக்கி முகம் கழுவிக் கொண்டு வேகமாகக் கீழே வந்தாள் கஸ்தூரி.

மாதங்கி காப்பியைக் கலந்து கொண்டு வந்து மேசை மீது அவள் முன்னால் வைத்தாள்.

கணவனை இழந்த பின் வேலைக்குப் போய்க் குடும்பத்தைக் கவனித்து, பிள்ளையை வளர்த்து ஆளாக்கப் பாடுபட்ட கஸ்தூரிக்குச் சரியாக உட்கார்ந்து ஒரு பிடி சாப்பிடக் கூடப் பொழுது இருந்ததில்லை. அடுப்பருகிலேயே தட்டைக் கையில் பிடித்துக் கொண்டு நின்றபடியே உணவைப் பரிமாறிக் கொண்டு இரண்டே வாயாகச் சாப்பிட்டு முடித்து வேலைக்கு ஓடவேண்டிய அவசர வாழ்க்கை. முதல் முதலாக அவள் உட்கார வைத்து உபசரிக்கப்படுகிறாள். வீட்டை நிர்வகிக்கவும் கடைசிக் காலத்தில் தன்னைக் கவனித்துக் கொள்ளவும் அவள் அப்படிப்பட்டதொரு மருமகளைத்தானே அடைய விரும்பினாள்?

மகிழ்ச்சி, திருப்தி, துன்பம் என்ற கலவை உணர்வு நெஞ்சை அடைக்க அவள் நிமிர்ந்து பார்த்தாள்.

ஸ்நானம் செய்துவிட்டு ஈரக் கூந்தலைத் தளர முடிந்து கொண்டு குங்குமம் துலங்கப் பணிசென்று காணப்பட்ட மாதங்கிக்கு அழகுக்குக் குறைச்சலா?

மருமகளை மீண்டும் ஒரு முறை காலோடு தலை பார்த்தாள். ஹர்ஷன் மீது அவளுக்குக் கோபம் பொங்கிக் கொண்டு வந்தது.

வாழ்க்கையில் அவன் மனைவி என்பவளிடம் என்னதான் எதிர்பார்க்கிறான்?

அழகையா? அறிவையா? அடக்கத்தையா? அன்பையா?

''அத்தை குளிக்க எல்லாம் தயாராக எடுத்து வச்சிருக்கேன்.'' — சங்கோஜத்துடன் புன்னகைத்தாள் மாதங்கி.

'இத்தனை குணங்களையும் ஒட்டு மொத்தமாகக் கொண்டிருக்கிற இந்தப் பெண்ணிடம் என்ன குறையைக் கண்டுவிட்டான்? வாழத் தெரியாத மடையன்...' என்ணிய படி கஸ்தூரி குளியலறையை நோக்கி நடந்தாள்.

(தொடரும்)

உங்கள் கேசம் அடர்த்தியின்றி
சக்தியின்றி இருக்கிறதா? உங்கள்
கேசத்தைப் பக்குவப்படுத்தி அழகையும்
ஆரோக்கியத்தையும் அளிக்கிறது...






**செழுமையான புரதப்போஷாக்கு நிறைந்த**

## ஹேலோ எக் ஷாம்பூ

ஊட்டம் குறைந்த நிலையில் உங்கள் கேசம் அடர்த்தியின்றியும், சக்தியின்றியும், ஆரோக்கியமின்றியும் காணப்படுகிறது.

பட்டுப்போன்ற, பொன் நிறமுள்ள வழவழப்பான ஹேலோ எக் ஷாம்பூ செழுமையான புரத ஊட்டம் நிறைந்த உத்தியின் மூலம் உங்கள் கேசத்தை சீராகப் படியவைத்து அதற்குத் தேவையான எல்லா ஊட்டங்களையும் அளிக்கிறது. உங்கள் கேசம் அழகாக ஆரோக்கியமாக, அடர்த்தியாகத் திகழ்கிறது.

ஹேலோ எக் ஷாம்பூவின் செழுமையான நுரைவளம் உங்கள் கேசத்தில் புகுந்து அதை பொலிவுடனும் தூய்மையான பளபளப்புடனும் திகழச் செய்கிறது.

**ஹேலோ எக் ஷாம்பூ...**

**அழகிய அடர்த்தியான ஆரோக்கியமான கேசத்திற்கு**

HES. G. 4. TH



**கல்கி**

**சந்தா விவரம்**

★

**மானேஜர்**
**கல்கி, சென்னை - 600032**

| | ஓராண்டு | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 46 | ரூ. 23 |
| இலங்கை (இந்திய நாணயப்படி) | ரூ. 64 | ரூ. 32 |
| இதர வெளிநாடுகள் | ரூ. 100 | ரூ. 50 |



✖ 'அந்த ஏழு நாட்கள்' பாக்கியராஜ், அம்பிகா

● அதிருஷ்ட தேவதையின் அழகிய கண்கள் திரும்பவும் ஜெய் சங்கரை நோக்க ஆரம்பித்து விட்டன. அவர் வீட்டுக்கு போன் செய்தால் ஷூட்டிங் போயிருக்கிறார் என்ற பழைய பல்லவி (இனிமையான பல்லவி) மறுபடி கேட்க ஆரம்பித்திருக்கிறது. நீங்கள் ஏன் வில்லனாக நடிக்கிறீர்கள் என்று அவரைக் கேட்டதற்கு,
''ஒரு நடிகன் எல்லா வேடங்களையும் ஏற்கவேண்டும்; நான் அன்றே 'பஞ்ச வர்ணக் கிளி'யில் வில்லனாக நடித்துவிட்டேன். அதை மக்கள் விரும்புவதாலும், பெரிய தயாரிப்பு நிறுவனங்கள் கேட்பதாலும்தான் நான் தொடர்ந்து நடிக்கிறேன்'' என்றார்.
பிழைக்கத் தெரிந்தவர்; பேசவும் தெரிந்தவர் தான், இல்லையா!

# வில்லன் ஜெய்!

● எதைப் பற்றியும் சர்வ சகஜமாகப் பேசி அலசுவார் ரூபா. சமீபத்தில் அவர் பார்த்த படம் 'பாபிலான்'. கிராமர் Vs கிராமர் படத்தில் நடித்த டஸ்டின் ஆஃப்மேன்தான் இப் படத்திலும் நடித்திருக்கிறார். ஆனால் இரண்டுக்கும் இடையில் எவ்வளவு வித்தியாசம்! மலைக்கும் மடுவுக்கும் என்பார்களே அப்படி வித்தியாசமான பாத்திரங்கள்! 'நடிப்பு என்றால் இதுவல்லவா நடிப்பு! பாத்திரத்தின் தன்மைக்கேற்ப நடிகர் மாறுவதென்றால் இப்படியல்லவா மாற வேண்டும்! இத்தகைய மாறுபட்ட கதாபாத்திரங்கள் அல்லவா சிறந்த நடிகருக்கு வழங்கப்பட வேண்டும்!'என்று சொல்லிச் சொல்லி வியக்கிறார் ரூபா.

● அண்ணா நகரில் ஓர் அழகான பங்களா. அதைச் சுற்றி உள்ளும் புறமும் 20–25 பேர் தயாராயிருந்தார்கள். ஆனால் ஷூட்டிங் ஏதும் நடக்கவில்லை. உள்ளே எட்டிப் பார்த்தேன். பாக்யராஜ் நின்றுகொண்டிருந்தார். என்னைப் பார்த்தவுடன் கையை ஆட்டிவிட்டு மாடிக்குச் சென்றுவிட்டார். எனக்கு ஒன்றுமே புரியவில்லை. கலகலப்பாகச் சிரித்துப் பேசும் பாக்யராஜ்தானா இவர்? சிறிது நேரத்தில் அங்கு வந்த பாக்யராஜின் மனைவி நடிகை பிரவீணா கணவருடன் தனியாகப் பத்து நிமிடம் பேசிவிட்டுச் சென்றுவிட்டார். புரியாத புதிரை விடுவிக்க என்னுடைய 007 மூளை வேலை செய்தது. மறுநாள் காலையிலேயே விஷயம் விவரமாகத் தெரிந்தது. பிரவீணா மீது யாரோ வழக்குத் தொடுத்திருக்கிறார்கள். அன்றைக்கு கால்ஷீட் பிரகாரம் வரவேண்டிய நடிகை அம்பிகாவும் வராததால் இரண்டும் சேர்ந்து பாக்கியராஜின் உற்சாகத்தை வெகுவாய்ப் பாதித்துவிட்டன

● ''என்னை சத்யஜித்ரே அழைத்தார். புகைப்படங்களை எடுத்துக்கொண்டு தம் அறைக்கு வருமாறு கூறினார். 'நீ நல்ல நடிகனாக வருவாய். உனக்கு என் படத்தில் சான்ஸ் தருகிறேன். ஆனால் எப்பொழுது என்றுமட்டும் கேட்காதே' என்றார். 'எப்பொழுது நடித்தால் என்ன, உங்கள் படத்தில் நடித்தால் போதும்' என்றேன்'' –இப்படிக் கூறுகிறார் தப்புத் தாளங்களில் ஆரம்பித்து முரட்டுக் காளை வழியாக எங்கள் ஊர்க் கண்ணகி வரை பல படங்களில் நடித்த சாந்தாராம். ஒரு படத்தின் பாத்திரத்துக்கும் மற்றொரு படத்தின் பாத்திரத்துக்கும் மிக மிக வித்தியாசமாக நடித்துள்ளார் சாந்தாராம். ஆனால், ''ஏன் எனக்கு இன்னும் சரியான வாய்ப்புக்கள் கிடைக்கவில்லை என்பது புதிராகத்தான் இருக்கிறது'' என்று அங்கலாய்க்கிறார் இவர். –''சலன்''



✖ சாந்தாராம்




✻ டாஷ்கெண்ட் வீரர்
- லால்பகாதூர், அயூப்கான், கோஸிஜின்



## 14. ஒன்றே சிந்தை

எப்படியோ கட்சியில் நாற்றுக்குத்தொண்ணூறு பேர் காங்கிரசில் இணைவதை ஒப்புக் கொண்டு விட்டார்கள். அதில் அவனுக்கு ஒரு மகிழ்ச்சி. இனி அவனது கைப் பணம் செலவழியாதல்லவா!

இணைப்பு மாநாட்டுக்காகக் கடைசியாக ஒரு தொகையை அவனிடமிருந்து திரு. சம்பத் பெற்றுக் கொண்டார்.

இந்தக் காலங்களில் புகழ் மயக்கத்திலும் வெற்றிப் போதையிலும் அவன் மிதந்தான். தி. மு. க.வை அழிக்க வேண்டும் என்ற வெறியே அவனுள் மேன்மேலும் வளர்ந்து கொண்டிருந்தது.

காமராஜரின் பெருமைகளுக்கு விளம்பரம் கொடுத்தான். தி. மு. க.வின் போலித்தனம் வெளியாகிவிடும் என அவன் நம்பினான்.

அவன் ஏற்றுக்கொள்கிற பணிகளைத் தவிர மற்றவற்றை அலட்சியப்படுத்தினான். அதன் விளைவாக ஏராளமான பொருள் நஷ்டமும், மான நஷ்டமும் ஏற்பட்டன. நீதி மன்றத்தில் அவன் ஜெயிக்க வேண்டிய வழக்குகளையெல்லாம் அவனது வக்கீலின் ஜூனியர் தோற்கும்படி விட்டுவிட்டார். காரணம் அவருக்கு அந்தப் பக்கம் லாபம் கிடைத்தது.

நண்பர்களாகப் பழகிய சில நடிகர்கள் எப்படி நடந்து கொண்டார்கள் என்பதை வெளியிட முடியவில்லை. இன்னும் அது ஆறாத ரணமாகவே இருந்து கொண்டிருக்கிறது.

'கர்ணன்' படத்துக்குப் பாட்டெழுத அவனைப் பெங்களூருக்கு அழைத்துச்சென்றார்கள். இரண்டே நாட்களில் பன்னிரண்டு பாடல்கள் முடிந்தன.

அங்கேயும் காமராஜரைஎண்ணிக்கொண்டு ஒரு பாடலை எழுதினான்.

''உள்ளத்தில் நல்ல உள்ளம் உறங்காதென்பது வல்லவன் வகுத்ததடா'' என்று கண்ணன் பாடுவதாக அமைந்தது அந்தப் பாட்டு.

தன் எழுத்துக்களைப் பற்றி அவன் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டிருந்த காலம் இது.

எதையும் தன்னால் எழுத முடியும் என்று இடமாக இருந்த காலம் இது. அந்த நம்பிக்கையைச் செயல் படுத்தாமலும் இருந்த காலம் இதுதான்.

அப்போதே அவன் ஆன்மீக இலக்கியங்களை எழுதத் தொடங்கியிருந்தால் இன்று ஒரு வடமொழிப் பண்டிதனாக விளங்கி இருப்பான்.

திரும்பத் திரும்பக் கடந்து போன காலங்களுக்காகவே ஏங்க வேண்டியிருக்கிறது. கார்காலத்தைத் தவற விட்டுவிட்ட மயில், மழைக் காலத்தில் விதைக்காமல் விட்டு விட்ட பூமி — சற்றுத் திரும்பிப் பார்க்கும் போது ஒரு பெருமூச்சு; சலனம்; சபலம்.

அந்த மூச்சிலிருக்கும் வெப்பத்தை நீங்கள் உஷ்ணமாகக் கணக்கிட முடியாது. இந்த ஒப்பாரிகளால் பயனென்ன? ஒன்றுமில்லை தான்!

ஒரு சுயசரிதம் இந்தப் பாடல்களாலேயே நிரப்பப்பட வேண்டும் என்று இறைவன் விதித்திருக்கும்போது, யார் அதிலிருந்து தப்ப முடியும்?

பிரக்ஞையற்ற அந்த மனிதனின் பயனற்ற நடமாட்டம் மீண்டும் ஆரம்பமாயிற்று.

த.தே.க. — காங்கிரஸ் இணைப்புக்காகவும் அலைந்தான்.

அந்த நாளும் வந்தது.

பெரியார் திடலில் மாநாடு. கூட்டம் பொங்கி வழிந்தது. அங்கேதான் 'காட்டுக்கு ராஜா சிங்கம்; பாட்டுக்கு ராஜா கண்ணதாசன்' என்று தலைவர் காமராஜர் புகழாரம் சூட்டினார்.

யாராவது ஒருவர் தட்டிக் கொடுத்தாலும் அல்லது தடவிக் கொடுத்தாலும் அவர்களை உச்சி மேல் வைத்து மெச்சிப் புகழ்வது அவன் பழக்கமல்லவா! அவன் காமராஜர் புகழ் மாலையை ஆரம்பித்தான்.

இந்த இணைப்புக்குப் பிறகு தோழர் சம்பத் நடந்து கொண்ட முறையைச் சொல்லாமலிருந்தால், அவனது சுயசரிதம் பூர்த்தியடையாது.

அவரை நம்பி தி.மு.க.விலிருந்து விலகி வந்து, பெரும் வாய்ப்புக்களையும், வசதிகளையும் இழந்துவிட்ட உத்தமத் தோழர்கள் அனைவரையும் அவர் கைவிட்டு விட்டார். 'காங்கிரசில் பெருங்காயம் கரைந்த மாதிரி

கரைந்துவிடுங்கள்' என்று போதித்துவிட்டார். அவர் மட்டும் தலைவர்களோடு ஒட்டிக்கொண்டார்.

காங்கிரஸ் பேரியக்கம் எவ்வளவுக்கெவ்வளவு உன்னதமானதோ, அவ்வளவுக்கவ்வளவு அதிலிருந்த காங்கிரஸ்காரர்கள் பலர் சுயநலக்காரர்கள். அவர்கள் கட்சியை வாழவும் விடவில்லை; கட்சிக்குள்ளே வந்தவர்களை வளரவும் விடவில்லை.

அந்தக் கூட்டத்தில் முண்டியடித்து முன்னேறுவது என்பது த. தே. க.வில் இருந்து வந்தவர்களுக்குக் கடினமாகத்தான் இருந்தது.

எம். பி. சுப்பிரமணியம், கரு. தமிழழகன், பொறையார் ஜம்பு, ஆர். எஸ். பாண்டியன், மதுரை வெ. சௌந்தரராஜன், ப. நெடுமாறன் — அற்புதமான செயல் வீரர்கள் எல்லாம் காங்கிரசில் விளம்பரம் இல்லாமற் தள்ளப்பட்டார்கள்.

சம்பாதிப்பதற்காகவே காங்கிரஸ் மாளிகையில் புகுந்துவிட்ட சிலர், அவர்களைப் புறக்கணிப்பதிலேயே கவனமாக இருந்தார்கள். சம்பத் அதனைக் கண்டும் காணமல் இருந்துவிட்டார்.

ஒப்பிட்டுப் பார்த்தால் இந்த வகையில் சம்பத்தை விட அண்ணா உயர்ந்தவர். கட்சிக்குப் பயன்படக் கூடிய நண்பர்கள் தவறே செய்துவிட்டாலும் கடைசி வரையில் அண்ணா காப்பாற்றுவார்.

காங்கிரசில் உள்ள நல்லவர்களையும் சேர்த்துக்கொண்டு, த. தே. கவிலிருந்து வந்தவர்கள் கட்டுப்பாடாகச் செயல்பட்டு சம்பத் தலைமை தாங்கி யிருப்பாரானால், இன்று காங்கிரசே அவர்கள் கையில் இருந்திருக்கும்.

அவனைப் பொறுத்தவரையில் இதுபற்றி அவன் கவலைப்படவில்லை. காரணம், அவனுக்கென்று தனி மேடை இருந்தது. தனித்தன்மை இருந்தது; அவன் பேசினல் மற்றவர்களுக்கு வராத கூட்டம் வந்தது.

உத்தமமான காங்கிரஸ்காரர்கள் பலர் அவனைப் பல்வேறு ஊர்களுக்கும் இழுத்துச் சென்று பேச வைத்தார்கள்.

1965க்கும் 67க்கும் இடையிலே தி.மு.க. அச்சமுற்றிருந்தது என்பது உண்மை.

லால் பகதூர் தேர்ந்தெடுக்கப்பட்டு ஓர் ஆண்டு முடிவதற்கு முன்பே இந்தியாவுக்கு அடுத்த சோதனை வந்தது. பாகிஸ்தான் இந்தியாவின் மீது படையெடுத்தது.

காஷ்மீரில்தான் முதலில் பாகிஸ்தான் படை புகுந்தது. அங்கு அது வேகமாகவும் முன்னேறியது.

அந்த நேரத்தில் தலைவர் காமராஜர் லால் பகதூருக்கு ஒரு யோசனை கூறினர். அவர் கூறிய யோசனைப்படி பஞ்சாபில் இரண்டாவது போர் முனையைத் துவக்கினர், லால் பகதூர்.

அங்கே லாகூரை நோக்கி நமது படைகள் வெகு வேகமாக முன்னேறின. நூற்றுக்கணக்கான டாங்கிகளை நமது வீரர்கள் குருவி பிடிப்பதைப் போல் பிடித்தார்கள்.

அந்த ஆனந்தத்தில் அவன் ஒரு கவிதை எழுதினன்.

### ஒன்றே சிந்தை

எழுதுகோல் யாவும் இதையே எழுதுக!
எண்ணும் நெஞ்சம் இதையே எண்ணுக!
தொழும்கரம்யாவும் அவரையே தொழுக!
தூங்கும் கண்களும் அவர்களைக் காண்க!
நாட்டு மண் காக்கும் நாயகன் சேனைகள்
வீட்டை மறந்து வீழ்ந்திறந்தாரென(க்)
கேட்டநாள் முதலாய்க் கிளர்ந்த தேசமே!
இறப்பில் வாழும் என்னரும் சோதரர்
சிறப்புக்கே நின்சிந்தை இருப்புக!
செவ்வான் படரச் செம்புலஞ் சிரிக்க
ஒவ்வோர் துளியும் உடலை விடுத்து
வீழ்ந்த காலையும் வேதனை யின்றி
ஏறுமுன் னேறென ஏறிய தானை
இனையபா ரதத்தின் இணையில்லாச் சரிதம்!
சரத்தி லிருந்து சரிந்த மணமலர்
தாலி சுழன்று தனித்த கைம்மையர்
மடியிலிருந்து மழலைக் கிளிமொழி
வடிக்குமுன் னுலே வாடிய பிள்ளைகள்
போரில் இவையே புனிதச் சரித்திரம்!
என்றும் சாவுதான் எதிலும் சாவுதான்!
இன்று சாவதோ சடிலாச் சாவுகாண்!
அங்கே,
எட்டு லட்சத்தினை எட்டிய வீரர்கள்
கட்டுப் பாடும் கடமை உணர்ச்சியும்
கொட்டும் பனியில் குளிர்ந்தெழும் மேனியும்
கொண்டு நிற்பதைக் குளிர்ந்த சிந்தையால்
வாழ்த்த மறந்தோர் மரத்தின் பட்டைகள்
ஆதிபத் தியம் அஸ்தமிக்கும் வரை
சாதி மதங்கள் சழக்குரை கட்சிகள்
பேத உணர்வுகள் பின்னல் நினைவுகள்
தன்னை நினைத்துத் தாயைப் புறம்விடும்
சின்னஉள்ளங்கள், செல்வம் பெருக்கும்
வாணிப நோக்கம், வந்த வரைக்கும்
சரியெனத் தேடும் சதித் தொழில் முறைகள்
தாய்ப்பழி பேசிச் சபையி லிருந்து
வாய்கெடச் சொல்லும் வதந்திகள் யாவும
நின்றுபோ கட்டும்! நினைவும் செயலும்
போரேயாகுக! போரே யாகுக!
புறப் புகழ் தேடும் போரேயாகுக!
யாரே ஆயினும் அன்னை பூமியில்
காலடி வைத்தால் கருவை யறுப்போம்!
என்னும் பாடலே எங்கும் முழங்குக!
மற்றவை மறந்து மானம் ஒன்றையே
சற்றே நினைக! சரிதம் நம் வசம்!

(வளரும்)

'அன்பே!'
'என்ன அத்தான்?'
'ஆருயிரே'
'சொல்லுங்க என் ராஜா!'
'இன்னமுதே!'
'அத்தான்!'
'எனக்கும் சரளாவிற்கும் அடுத்த மாதம் கல்யாணம், கண்டிப்பா வந்திடணும்!'
- பிரியா பாலு



வளமான வாழ்விற்கு செல்வமே உறுதுணை.
செல்வத்தின் நாயகியான லக்ஷ்மியின்



'அருள் பெற்று, லக்ஷ்மி விலாஸ் பாங்கில்
சேமிப்புக்கணக்கை துவங்கிடுவீர்

எமது சேமிப்புத் திட்டங்கள்

- லக்ஷ்மி தின சேமிப்பு.
- பொன்விழா ரொக்கப் பத்திரம்.
- ரெகரிங் டெபாசிட் திட்டம்.
- சுழல் முதலீட்டுத் திட்டம்.



**லக்ஷ்மி விலாஸ்**
**பாங்க் லிமிடெட்**

பதிவு அலுவலகம்: கரூர் 639 001
நிர்வாக அலுவலகம்: சென்னை 600 086

என். வி. ஸ்ரீநிவாசன்
சேர்மன்

எமது பம்பாய்-மாதுங்கா கிளை விரைவில் செயல்பட இருக்கிறது.

# குளவிக் கூடு

மாரி—அறவாழி

“அம்மா .... அம்மா .... இங்கே ஓடி வாயேன்....”

மூச்சைப் பிடித்துக் கொண்டு இரைந்தான் எட்டு வயது சுந்தர்.

ஈர விறகை அடுப்பில் வைத்துவிட்டுப் புகைக்குள் வெந்து கொண்டிருந்த தேவகியம்மாளுக்கு எரிச்சலான எரிச்சல்.

“என்னடா அப்படி உயிர் போகிற மாதிரி கத்துகிறாய்? என்ன வந்தது?....” என்று கேட்டுக் கொண்டே ஓடிவந்தாள் தாழ்வாரத்துக்கு.

“அதோ பாரேன்...”

கையை நீட்டிக் கூரையைச் சுட்டிக் காண்பித்தான் அவன்.

கூரை விட்டத்தில் ஒரு குளவி கூடு கட்டியிருந்தது.

இரண்டு குளவிகள் ஒன்று மாற்றி ஒன்று உள்ளே போவதும் வெளியே வருவதுமாகப் பறந்து கொண்டிருந்தன.

“என்னம்மா அது?....”

“தெரியாதா?... குளவி! கூடு கட்டியிருக்கிறது. தூர வந்துவிடு. கொட்டினால் வலிக்கும்....”

“அப்படியானால் உடைத்து விடுகிறேனே” சொல்லிக் கொண்டே மூங்கில் கழியால் இடிக்கப் போனான்.

தேவகியம்மாள் பிடித்துக் கொண்டாள்.

“வேண்டாம்! உடைக்காதே...”

“ஏன்?”

“வீட்டில் குளவி கூடு கட்டினால் நல்லது. அதை உடைக்கக் கூடாது. நீ போய் வேறு இடத்தில் விளையாடு....”

மகனைத் துரத்திவிட்டுக் கூட்டை உற்றுக் கவனித்தாள் தாயார்க்காரி.

ஒன்றிரண்டு நாட்களுக்கு முன்புதான் கட்டப்பட்டிருக்க வேண்டும் அது.

ஈர மண் அப்படியே இருந்தது.

சற்று நேரம் அதையே பார்த்துக்கொண்டிருந்துவிட்டு மகிழ்ச்சியுடன் சமையலறைக்குச் சென்று விட்டாள்.

மாலையில் தொழிலகத்திலிருந்து கணவன் சிவராமன் வந்ததும், காப்பி கொடுத்து விட்டு மகிழ்ச்சியுடன் சொன்னாள்:

“...இந்த வீட்டுக்குச் சீக்கிரத்தில் ஒரு புது விருந்தாளி வரப் போகிறார்....”

வியப்புடன் கேட்டார் சிவராமன்.

“புது விருந்தாளியா? யார் அது? எங்கிருந்து வருகிறார்கள்?”

“கருப்பூரிலிருந்து...”

“கருப்பூரா? எந்தக் கருப்பூர்?....”

“என்னங்க தெரியாதது மாதிரி கேட்கிறீங்க?.... எல்லாம் இந்தக் கருப்பையினர்தான்!....”

இவ்வாறு சொல்லித் தன் வயிற்றைத் தொட்டுக் காட்டியபோது அவளது முகம் நாணத்தால் சிவந்து விட்டது.

பாதிக் குடித்துக் கொண்டிருந்த காப்பியை அப்படியே வைத்து விட்டார் சிவராமன்.

“அடி கள்ளி! இத்தனை நாள் என்னிடம் சொல்லவேயில்லையே! எத்தனை மாதம்?” என்று கன்னத்தைக் கிள்ளினார்.

“அய்யே விடுங்க! ஆசையைப் பாரு இந்த வயதிலே....”

கையை உதறினாள் தேவகியம்மாள்

“அப்படி என்ன வயதாகி விட்டது எனக்கு? அடுத்த புரட்டாசி வந்தால் ஐம்பத்திரண்டு! அவ்வளவுதானே....”

“ஆமாம்! ஐம்பத்திரண்டிலே குழந்தை வேண்டுமாக்கும் உங்களுக்கு?....”

“நீ கொடுத்தால் வேண்டாம் என்றா சொல்வேன்?”

“போதும் உளறிக் கொட்டாதீர்கள்.”

“உளறுவது நானா? குழந்தை ஒன்று சீக்கிரம் பிறக்கப் போகிறது என்று...”

“ஆமாம். சொன்னேன்! அப்படிச் சொன்னதினாலேயே நான்தான் பிள்ளை பெற்றுக் கொடுக்கப் போகிறேன் என்று நினைத்துக் கொள்வதாக்கும்....”

“நீ இல்லை என்றால் வேறு யார் இருக்கிறார்கள் இங்கே?”

“இந்த வீடு என்றால் நீங்களும் நானும் மட்டும்தானா? நமது பிள்ளைகள் எல்லாம் சேர்த்தி இல்லையா?”

“இல்லை என்று யார் சொன்னது? ஆனால் சுந்தர் பயல் ஒருவனைத் தவிர மற்ற நாலு வரும் வெளியூரில் அல்லவா இருக்கிறார்கள்?”

“நால்வரில் சொர்ணத்தை விட்டுத் தள்ளுங்கள். அவன்தான் மதுரையில் படித்துக் கொண்டிருக்கிறானே! மற்ற மூவரும் என்ன ஆனார்கள்? சேலத்திலும் கோயமுத்தூரிலும் திருச்சியிலும் குடியும் குடித்தனமுமாகக் கணவன்மார்களுடன் மகிழ்ச்சியாகத்தானே இருக்கிறார்கள். அவர்களில் யாராவது ஒருத்தி கர்ப்பமாக இருக்கலாம் அல்லவா?”

“இருக்கலாம்... இருக்கலாம். ஆனால் அது உனக்கு எப்படித் தெரிந்தது? கடிதம் ஏதாவது வந்ததா இன்றைக்கு?”

“கடிதமெல்லாம் இல்லை. நம் வீட்டுக் கூரையில் ஒரு குளவி கூடு கட்டியிருக்கிறது! குளவி கூடு கட்டினால் பிள்ளை பிறக்கும் என்பது ஐதீகம்”

தான் நினைத்தது போல் தன் மனைவி குளியாமல் இருக்கவில்லை என்பது தெரிந்தவுடன் சிவராமனுக்கு ‘த்ரில்’ போய் விட்டது.

“அவர்கள்தான் வருடம் தவறினாலும் பிள்ளை பெற்றுக் கொள்ளத் தவறுவதில்லையே. அவர்கள் மூலம் புது விருந்தாளி வருவதில் ஆச்சரியம் என்ன இருக்கிறது? ஆனால் ஒன்று. மூன்று மகள்களுக்கும் இதுவரை ஆண் குழந்தைகளே இல்லை. இந்தத் தடவையாவது நமக்குப் பேரன் பிறந்தால் நல்லது...”

“கவலைப்படாதீர்கள். இந்தத் தடவை பேரன்தான். தைரியமாக இருங்கள்.”

பதினைந்து நாட்களுக்குப் பின் சிவராமன் ஒரு நாள் சீக்கிரமாகத் தொழிலகத்திலிருந்து வீடு திரும்பினார்.

முகத்தில் பரபரப்பும் கவலையும் இருந்தன.

''என்ன சீக்கிரம் வந்து விட்டீர்கள்? உடம்புக்கு ஒன்றுமில்லையே?''

''அதெல்லாம் ஒன்றும் இல்லை. மதுரையிலிருந்து சொர்ணத்துக்கு உடம்பு சரியில்லை என்று தந்தி வந்திருக்கிறது. இரவு வண்டிக்கே நாம் இருவரும் போக வேண்டும். புறப்படத் தயாராகு. நான் போய் டிக்கட் பதிவு செய்துவிட்டு வருகிறேன்...'' இவ்வாறு கூறிவிட்டுப் போய்விட்டார் சிவராமன்.

சுந்தரைப் பக்கத்து வீட்டாரிடம் ஒப்படைத்து விட்டு, கணவனும் மனைவியும் பாண்டியன் விரைவு வண்டியில் புறப்பட்டு விட்டனர் மதுரைக்கு.

மதுரையில், மாணவியர் விடுதிக் காப்பாளர் சொன்ன செய்தி பேரிடியாக அவர்கள் இருவரையும் தாக்கியது.

அவசரம் அவசரமாகச் சொர்ணத்தை மருத்துவர்களிடம் அழைத்துச் சென்றனர். பணத்தைத் தண்ணீராகச் செலவழித்தனர். இரண்டு நாட்கள் தங்கியிருந்து ஊருக்குப் புறப்பட்டபோது,

''நீ படித்துக் கிழித்தது போதும், வீட்டுக்கு வந்து ஒழுங்காக இருந்து கல்யாணம் செய்து கொள். பணம் செலவழித்து வெளியூருக்கு அனுப்பிப் படிக்க வைத்தால் இங்கு பாய் பிரண்டு பிடித்துக் கொண்டா திரிகிறாய்? நல்லவேளை ஆரம்பத்திலேயே வார்டன் அம்மா கண்டுபிடித்துத் தகவல் கொடுத்ததால் டாக்டரிடம் காட்டி வயிற்றைச் சுத்தம் செய்ய முடிந்தது. இல்லையென்றால் என்ன ஆகியிருக்கும்...'' என்று மகளின் தலையில் தட்டி அவளையும் தங்களுடன் இழுத்து வந்து சேர்ந்தனர்.

---

பெற்றோருடன் அக்காவும் வந்ததைப் பார்த்துத் துள்ளிக் குதித்தான் சுந்தர்.

''அக்கா! அக்கா! இங்கே வந்து பாரேன். நம்ம வீட்டில் ஒரு குளவி கூடு கட்டியிருக்கிறது'' என்று இழுத்தான்.

தேவகியம்மாள் அவன் முதுகில் நான்கு அறை வைத்து, ''உள்ளே போடா கழுதை! இந்த வீட்டில் இனி குளவி வரவும் வேண்டாம், கூடு கட்டவும் வேண்டாம்...'' என்று விரட்டிவிட்டு, விட்டத்திலிருந்த குளவிக் கூட்டையும் விறகுக் கட்டையால் உடைத்துத் தள்ளினாள்.

வீட்டில் குளவி கூடு கட்டினால் நல்லது என்று சொல்லி அதை உடைக்கக் கூடாது என்று தடுத்த தாயார், இப்போது தன் கையாலேயே உடைத்து அழிப்பது ஏன் என்பது புரியாமல் விழித்தான் சுந்தர்.





# கோகலேயைச் சாடிய திலகரின் சீடர்

**பா**ரதியாருடைய பார்வையிலே, ஆங்கிலேயர் இந்திய சமுதாயத்தை அடிமைப் படுத்தியிருப்பதற்கும், இந்திய சமுதாயத்திலேயே உயர்சாதி இந்துக்கள் தாழ் சாதியினரைக் கொடுமைப் படுத்துவதற்கும் வேற்றுமை தோன்றவில்லை. இந்த இரண்டு கொடுமைகளையும் அந்த மகா கவி ஒன்றாகவே கருதியிருக்கிறார். அதனாலும் கோபாலகிருஷ்ண பாரதியாரின் நந்தனார் சரித்திரக் கீர்த்தனை அவரைக் கவர்ந்து விட்டது போலும்!

''மேத்தா திலகருக்குச் சொல்வது'' என்னும் தலைப்பிட்டு காங்கிரசிலிருந்த மிதவாதிகளைத் தாக்கிப் பாரதியார் ஒரு கீர்த்தனையைப் பாடியுள்ளார். அதற்கு ''புதிய கட்சித் தலைவரை நோக்கி நிதானக் கட்சியார் சொல்வது'' என்றும் அடைப்புக்குள் விளக்கம் தந்துள்ளார். இதற்கு மேலும் பாரதியார் தந்துள்ள விரிவான குறிப்பு ஒன்றையும் நாம் பார்ப்போம்.

''சிதம்பரப் பதவியாகிய முக்தியிலே நந்தனார் அடங்காத தாகம் கொண்டிருந்தார். அது அவரை அடிமை கொண்டிருந்த ஆண்டைக்கு மனமில்லை. அவன் நந்தனாரைப் பலவிதஇம்சைகளுக்கு உட்படுத்தினான்; அதுவுமின்றிச் சேரியிலிருந்த நிதானப் பறையர்கள் பலர் நந்தனார் சிதம்பரத்தைப் பற்றி நினைக்கலாகாதென்று போதனை செய்தார்கள். அந்த நிதானஸ்தர்களிலே ஒருவர் பாடிய பாட்டின் கருத்தையும் வர்ண மெட்டையும் தழுவிப் பின்வரும் பாடல் செய்யப்பட்டிருக்கிறது: ''ஒய் நந்தனாரே, நம்ம ஜாதிக் கடுக்குமோ, நியாயம்தானோ நீர் சொல்லும்'' என்ற வர்ண மெட்டு.

சமுதாயப் பிரச்னைக்கும் அரசியல் பிரச்னைக்குமுள்ள ஒற்றுமைக்கு இதை விடவும் சான்று வேண்டுமோ?

கோபால கிருஷ்ண பாரதியாரின் கீர்த்தனையில் உள்ள கருத்துக்களையும் சற்றேறக்குறைய வார்த்தைகளையும் அப்படியே எடுத்தாண்டிருக்கிறார் சுப்பிரமணிய பாரதியார். நந்தனார் கீர்த்தனையிலே,

சேரியில்லா வழக்கம்
செய்து கொண்டுவந்த பழக்கம்—இந்த
ஊரிலெங்குமது முழக்கம் வெகு
உறுதியாச்சுது ஒழுக்கம் இது (ஞாய)
''சிதம்பர மென்கிற பேச்சு — நாங்கள்
செய்திடும் காரியம் போச்சு — அது
மதம் பிடித்தது போலாச்சு இந்த
மண்டலப் பறையருக் கேச்சு''

என்ற அடிகள் உள்ளன.

இவை, சுப்பிரமணிய பாரதியாரின் பாடலில் அமைந்துள்ள விதம் வருமாறு:

''முன்னறியாப் புது வழக்கம் — நீர்
மூட்டி விட்டதிந்தப் பழக்கம் — இப்போ
தென்னகரிலுமிது முழக்கம் — மிக
இடும்பை செய்யுமிந்த ஒழுக்கம் (ஒய் திலகரே)
''சுதந்திர மென்கிற பேச்சு — எங்கள்
தொழும்புக ளெல்லாம் வீணாய்ப் போச்சு — இது
மதம் பிடித்தது போலாச்சு — எங்கள்
மனிதர்க் கெல்லாம் வந்ததேச்சு (ஒய் திலகரே)

இவ்வாறே பல பாடல்கள் தொடர்கின்றன. இவை மூலம் பாரதியார் ஒரு கல்லில் மூன்று மாங்காய்கள் விழச் செய்ய முயன்றார் எனலாம். ஒன்று மிதவாதிகளுக்கு எதிராக தீவிரவாதிகளுக்கு ஆதரவு; இரண்டு, சுதந்திர ஆர்வம் வளர்த்தல்; மூன்று, கோபால கிருஷ்ண பாரதி பாடலை வரிக்கு வரி நினைவூட்டிய வகையிலே தீண்டாமை ஒழிப்பு!

**கா**ங்கிரசிலிருந்த மிதவாதிகளுக்கெதிராக பாரதியார் பிரசாரப் போர் நடத்தினார். சுதேசிய இயக்கத்தில் தங்களுக்கும் பற்று இருப்பதாக மிதவாதிகள் சொல்லுவதெல்லாம் வெறும் நடிப்பு என்று பாடிப் பறைசாற்றினார். அவர்களுடைய நடிப்பை வருணித்து ''நடிப்புச் சுதேசிகள்'' என்னும் தலைப்பிட்டுக் ''கிளிக்கண்ணிகள்'' பாடினார்.

அந்தக் கிளிக்கண்ணி 1907ல் பாடியதாக இருக்க வேண்டும். காங்கிரசிலிருந்த மிதவாதிகளைப் பாரதியார் பழித்துப் பாடினாலும், அவர்களுடைய அறிவாற்றலிலே அவருக்கு மதிப்பு இருந்தது. கோபால கிருஷ்ண கோகலேயையும், அவரைப் பின்பற்றிய மிதவாதிகளையும் பாரதியார் மதித்தார். பிரிட்டிஷ் ஆட்சியிடம் அவர்கள் கொண்டிருந்த விசுவாசத்தை அவரால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. அதனாற்றான், அவர்களைப் பழித்தார். பழித்தது, அவர்களைத் திருத்துவதற்காகத்தானும்! இதனை உணர்த்த ''நடிப்புச் சுதேசிகள்'' என்னும் தலைப்பின் கீழே ''பழித்து அறிவுறுத்தல்'' என்னும் துணைத் தலைப்பையும் தந்துள்ளார்.

''நெஞ்சிலுரமுமின்றி நேர்மைத் திறமுமின்றி
வஞ்சனை சொல்வாரடீ — கிளியே!
வாய்ச் சொல்லில் வீரரடி!
கூட்டத்தில் கூடிநின்று கூவிப் பிதற்றலன்றி
நாட்டத்தில் கொள்ளாரடீ — கிளியே!
நாளில் மறப்பாரடீ!

இந்த வரிகளிலே ஆங்கிலக் கல்வி கற்ற மிதவாத அறிஞர்களின் பேச்சுத் திறனைப் பாரதி ஒப்புக்கொள்கிறார். ஆனால், தாங்கள் சொல்வதைத் தாங்களே செயலில் காட்டாத ''வாய்ச் சொல் வீரர்கள்'' என்பதுதான் பாரதியாரின் குற்றச்சாட்டு. மேடையில் பேசிவிட்டுப் பின்னர் மறந்து விடுவார்கள் என்கிறார்.

**ம.பொ.சி**

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543) Editor: K. Rajendran

# மேனியழகு மிளிர இயற்கை உங்களுக்குத் தரும் சீதனம்




ஓர் அரசு
நிறுவனத்தின்
தரமிகு
தயாரிப்பு

## வேப்

மேனிக்கு மெருகூட்டும்
இயற்கையின் கைவண்ணம்

## வேப்

வேப் சோப்பு, உங்கள் சருமம் உலர்ந்து சுருங்கிவிடாமல் பாதுகாத்து, மழ மழப் பாக இருக்க உதவுகிறது.
கொழிக்கும் நுரை, நீடிக்கும் நறுமணம், உங்கள் மேனியின் இளமையையும் அழகையும் பேணிக் காக்கிறது வேப்.

கேரளா சோப்ஸ் & ஆயில்ஸ் லிமிடெட்
கோழிக்கோடு.

FDS KSO 3383A TAM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

உங்களைப்
போன்றவர்களை திருப்தி
செய்ய சார்மினாரால்தான்
முடியும்

CHARMINAR

சற்றே இளைப்பாறு! சார்மினாருக்கு இணையுண்டோ

1 ரூபாய்க்கு 10*

* அதிகபட்ச விலை, தலவரிகளைப் பொறுத்தது

சட்டபூர்வமான எச்சரிக்கை: சிகரெட் குடித்தல் உடல் நலத்திற்குத் தீங்கானது

STATUTORY WARNING: CIGARETTE SMOKING IS INJURIOUS TO HEALTH

CASYS-238.203

பிரதான விற்பனையாளர்: மெஸர்ஸ் R. குமார் & பிரதர்ஸ் நெய்வேலி-607803